# அஜாக்ஸ் உப்புத்தாள்கள்

- பிளின்ட் (ஸாண்ட்)
- கார்னட்
- எமரி
- ஸிலிகார்ப்
- அஜாக்ஸைட்
- பேப்பர், கிளாத்
- டிஸ்க், பெல்ட்ஸ்
- பேண்டுகள், மற்றுமவை.





மரம், தோல், உலோகம் முதலியவற்றை உபயோகிக்கும் எல்லா இன்ஜினீரிங் வேலைகளிலும் சிறந்த அஜாக்ஸ் உப்புத்தாள்கள் உபயோகிக்கப் படுகின்றன. அஜாக்ஸ் உப்புத்தாள்கள் சுலபமாகவும், சீராகவும் வெட்டுவதால் வேலை துரிதப்படுகிறது. நுணுக்கமான வேலைகளையும் சிறப்பாக செய்ய முடிகிறது.





**அஜாக்ஸ் பிராடக்ட்ஸ் லிமிடெட்.**
106, அரண்மனைக்காரத் தெரு, சென்னை

மானேஜிங் ஏஜண்ட்ஸ் :
**முருகப்பா & சன்ஸ்**

தென்னிந்தியாவுக்கு ஸோல் விற்பனை ஏஜண்டுகள் :
**மார்ஷல் ஸன்ஸ் & கம்பெனி (இந்தியா) லிமிடெட்**
தபால் பெட்டி நெ. 141 :: சென்னை

# ஜூபிடரின்

# வால்மீகி

## டாக்கி பாட்டுகள்



மதுரகீதவாணி

### என். ஸி. வசந்தகோகிலம்

N. 18281 | புவி மீது<br>ஜெய ஜெய புவனபதே

N. 18284 | பொய் தவழும்<br>சுந்தரானந்தா

### ஸ்ரீ ஹொன்னப்பா பாகவதர்

N. 18282 | ஸ்ரீ வைகுண்டபதே<br>2 பாகங்கள்<br>(ராகமாலிகை)

N. 18283 | பகவான் அவதரிப்பார்<br>(கரஹரப்பிரியா)<br>ராம ஜெய<br>(புன்னாகவராளி)





## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்" ரிகார்டுகள்

எல்லா கிராமபோன் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

### தி கிராமபோன் கம்பெனி லிமிடெட்.

டம்டம் — லாகூர் — டில்லி — பம்பாய் — மதராஸ்

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 5 | இதழ் 51 — 1946 ஜூலை 28 — ஞாயிறு | ஆடி 13

| | | |
|---|---|---|
| என்ன சேதி? | | 5 |
| நிகழ்ச்சிச் சித்திரம் | உம்மன் | 6 |
| ஊருக்கு இளைத்தவர்கள்! | | 9 |
| வட்ட மேஜை | | 13 |
| இராணுவ உதவி! | | 14 |
| ஆசை போகவில்லை! | டி. கே. சி. | 15 |
| எங்கும் பட்டினி (படங்கள்) | டங்கன் | 17 |
| அசட்டுப் பெண் | வேங்கடலட்சுமி | 23 |
| ஒரு கடிதம் | ரங்கு | 29 |
| வான சஞ்சாரம் | இசைத் தேனீ | 32 |
| ஆகாச கங்கை | கர்நாடகம் | 34 |
| யசோதரா | விசுவம்பரநாத் | 35 |
| படித்துப் பார்! | | 40 |
| பாப்பா மலர் | ராஜீ | 42 |
| காலக்ஷேபம் | | 44 |

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

அமெரிக்கர்கள் ஓர் அதிசயமான ஜாதியார். உலகத்தை உத்தாரணம் செய்வதில் அவர்களுக்குள்ள அக்கறை வேறு யாருக்கும் கிடையாது. ஐரோப்பாவில் யுத்தம் என்று தெரிந்ததும் சைன்யத்தை அனுப்புவார்கள். திரும்பி வராதென்று தெரிந்திருந்தும் கடன் கொடுப்பார்கள். தங்கள் ஆட்சியில் உள்ளவர்களை விடுவித்துச் சுதந்திரம் கொடுப்பார்கள். சமாதான மகாநாடுகளுக்குத் தலைமை வகிப்பார்கள். பல கோடி ரூபாய் செலவில் அணுகுண்டுப் பரீட்சையையும் அவர்களே நடத்துவார்கள். பஞ்சத்தில் அடிபட்ட தேசங்களுக்கு உணவு அனுப்புவார்கள். அதைப் பற்றித் தம்பட்டம் அடிப்பதற்காகப் பஞ்சக் கமிஷனையும் பத்திரிகை நிருபர்களையும் அனுப்பி வைப்பார்கள்.




இந்த மாத ஆரம்பத்தில் சென்னைக்கு அமெரிக்கப் பஞ்சக் கமிஷன் விஜயம் செய்தது. அந்தக் கமிஷனில் ஒருவரான மிஸ் வில்லியம் ஸ்மித் என்னும் பெண்மணியும், கமிஷனோடு வந்த "லைப்" பத்திரிகையின் புகைப்பட நிருபர் மார்க்கரெட் பார்க் ஒயிட் என்பவரும் நமது இந்த இதழ் அட்டையில் விளங்குகிறார்கள். படத்திலுள்ள மூன்றாவது ஆசாமி நமது விசேஷ புகைப்பட நிருபர் டைரக்டர் டங்கன். பஞ்சக் கமிஷன் அங்கத்தினரோடு சென்று அவர் எடுத்த படங்களில் சிலவற்றை இந்த இதழில் உள்ளே காணலாம்.

சில தினங்களுக்கு முன்னால் அமெரிக்காவிலிருந்து வந்து விட்டுப்போன ஹூவர் துரையைப்போல் இந்தப் பஞ்சக் கமிஷனும் "இந்தியாவில் பஞ்சம் இல்லை" என்று சொல்லாது என்று நம்புகிறோம். ஏனெனில், மேற்படி கமிஷன் உண்மையாகவே சில பஞ்சப் பிரதேசங்களைப் பார்வையிட்டிருப்பது டைரக்டர் டங்கன் எடுத்து வந்துள்ள போட்டோக்களிலிருந்து நன்கு தெரிகிறதல்லவா?



கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 51

# என்ன சேதி?

## சென்னை உயர்கிறது

சென்னை மாகாண சட்டசபையில் காங்கிரஸ் கட்சியார் அரசியல் நிர்ணய சபைக்கு அனுப்புவதற்காக 45 பெயர்களைக் குறிப்பிட்டுச் சிபார்சு செய்தார்கள். அந்த 45 பேரும் ஒருவர்கூடச் சோடை போகாமல் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். ஐக்ய மாகாணம், பீஹார் மாகாணங்களிலேகூட இவ்வளவு ஒழுங்காகவும் காங்கிரஸின் கௌரவத்தை நிலைநாட்டும்படியாகவும் தேர்தல் நடைபெறவில்லை. மேற்படி மாகாணங்களில் காங்கிரஸுக்கு மாறுபட்டுச் சுயேச்சையாக நின்ற சிலரும் ஜெயமடைந்திருக்கிறார்கள். இவ்விதம் சென்னை மாகாணம் மறுபடியும் சிறப்பு அடைந்திருப்பதற்குக் காரணம் என்ன என்பது பகிரங்க ரகசியம். நமது சட்டசபையில் உள்ள முக்கிய கட்சித் தலைவர்கள் இந்தத் தேர்தல் விஷயத்தில் ராஜாஜியின் யோசனையைக் கேட்டு அதன்படி நடந்து கொண்டதுதான். அபேட்சகர்களைப் பொறுக்கும் விஷயத்தில் ராஜாஜி அவ்வளவு கவனம் செலுத்திப் பெயர்களை நிர்ணயித்தபடியால், காங்கிரஸ் சிபார்சின்படியே 45 பேரும் வெற்றியடைந்தார்கள்.

இனி மற்றக் காரியங்களிலும் ராஜாஜியைக் கலந்து கொண்டு அவருடைய யோசனைப்படி செய்வது என்று சட்டசபையிலுள்ள காங்கிரஸ் கட்சியினர் ஏற்படுத்திக் கொண்டால் சென்னையின் உயர்வு நிரந்தரமாயிருக்கும்.

## அநுதாபமும் ஆறுதலும்

காங்கிரஸ் அடைந்த வெற்றியைக் குறித்து நாம் குதூகலம் அடையும் போது, மேயர் சிவராஜ் அவர்களின் விஷயத்தில் இயற்கையாக அநுதாபம் ஏற்படுகிறது. கணக்கு யமன் அவரை இந்த மாதிரி ஆசைகாட்டி மோசம் செய்திருக்க வேண்டாம். முதலில் போட்ட கணக்கில் ஸ்ரீ சிவராஜ் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டு அவருக்கு டாக்டர் அம்பேத்கரிடமிருந்து வாழ்த்துத் தந்தியும் வந்துவிட்டதாம். அதன் பிறகு கணக்கிலே தவறு நேர்ந்திருக்கிறது என்று கண்டு பிடித்து அவருக்குப் பதிலாக ஸ்ரீமதி தாக்ஷாயணி வேலாயுதம் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டது. ஹரிஜன் குலத்தைச் சேர்ந்த கல்வியறிவு வாய்ந்த ஒரு சகோதரிக்குத்தான் தமக்கு வந்திருக்கக் கூடிய ஸ்தானம் போயிற்று என்ற எண்ணம் ஸ்ரீ சிவராஜ் அவர்களுக்கு ஆறுதல் அளிக்க வேண்டும்.

## ஆலை திறந்தது!

கடைசியாக, சென்னை மந்திரிகளுக்கு ரோஷம் பிறந்து பக்கிங்காம் கர்நாடிக் ஆலை வேலை நிறுத்த விஷயத்தில் தீவிரமாகத் தலையிட்டுச் சமரசம் உண்டு பண்ணினார்கள். ஆலைக் கதவு திறந்து தொழிலாளிகளும் வேலைக்குத் திரும்பிச் சென்றார்கள். ரொம்பவும் சந்தோஷமான செய்தி. இந்த மாகாணமே திருப்தியடையக் கூடிய காரியம்.

மேற்படி வேலை நிறுத்த விஷயத்தில் நமது தொழில் மந்திரி ஸ்ரீ வி. வி. கிரியின் திறமையின்மை மிக ஸ்பஷ்டமாக விளங்கியிருக்கிறது. அவர் மனது வைத்துத் திறமையாகக் காரியம் செய்திருந்தால் நாற்பது நாளைக்கு முன்பே இந்த நல்ல முடிவு ஏற்பட்டிருக்கும். 14,000 தொழிலாளிகளுக்கும் பிரதம மந்திரி பிரகாசத்துக்கும் இவ்வளவு அநாவசியத் தொந்தரவு நேர்ந்திராது. சென்னை மாகாணத்துக்கு ஒரு கோடி கெஜம் துணி நஷ்டம் ஏற்பட்டிராது.

இதற்கு மாறாக, தொழிலாளர் தலைவர் ஸ்ரீ அந்தோனி ஆரம்பத்திலிருந்து ஒவ்வொரு விஷயத்திலும் தொழிலாளருடைய அபிப்பிராயத்தைக் கலந்து கொண்டு காரியம் செய்ததையும், தொழிலாளிகளுடைய சுயமரியாதைக்குப் பங்கமில்லா

மல் சமரசம் ஏற்படுவதற்காகப் பெரும் பாடுபட்டுக் காரியசித்தி அடைந்ததையும் பெரிதும் பாராட்ட வேண்டும்.

## "ஒருவராலும் முடியாது!"

ரீவினியூ மந்திரி கரந்த் ஒரு பெரிய போடு போட்டிருக்கிறார். "உடனே இந்த மாகாணம் முழுவதிலும் மது விலக்குச் செய்ய ஒருவராலும் முடியாது!" என்று சொல்லியிருக்கிறார். கிணற்றுத் தவளையானது, "என்னுடைய கிணற்றைக் காட்டிலும் ஒருநாளும் சமுத்திரம் பெரிதாயிருக்க முடியாது!" என்று சொன்னது ஞாபகத்துக்கு வருகிறதல்லவா? "ஒருவராலும் முடியாது" என்று சொல்வது சுத்த அறியாமை; அல்லது பெரும் மோசடி. பதவி மோகத்தையும் உத்தியோகப் பற்றையும் விட்டுவிட்டு முயன்றால் ஸ்ரீ கரந்தினால் கூட அது முடியும்! மற்றவர்களால் கட்டாயம் முடியும் என்று சொல்ல வேண்டியதில்லை.

## ஒப்புக் கொண்டார்கள்!

சென்ற வாரம் பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபையில் இந்தியாவைப் பற்றிய விவாதம் நடைபெற்றது.

இந்தியாவுக்கு வந்துவிட்டுப் போன மூன்று மந்திரிகளும் விவாதத்துக்குப் பதில் அளித்திருக்கிறார்கள். இந்தியா மந்திரி பெதிக் லாரென்ஸும், வர்த்தக மந்திரி ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸும் வெகு நீளமாகப் பேசியிருக்கிறார்கள். இந்தியாவுக்கு வந்தது முதல், டில்லியில் கொளுத்திய வெய்யில் வரை ஒரு விஷயத்தையும் பாக்கி விடாமல் பேசியிருக்கிறார்கள். அவர்கள் மாத்திரம் பேசவில்லை. மௌன விரதத்திலே புகழ் பெற்ற பிரிட்டிஷ் கடற்படை மந்திரி ஆல்பெர்ட் அலெக்ஸாண்டர் துரையும் தம்முடைய மௌனத்தைக் கலைத்து வாயைத் திறந்து பேசியிருக்கிறார். பேசியது மாத்திரம் அல்லாமல் சர்ச்சிலுக்கு ஒரு பலமான சூடும் கொடுத்திருக்கிறார். அப்படிச் சர்ச்சிலுக்குச் சூடு கொடுக்கும் போது, ஓர் அபூர்வமான உண்மையை — பிரிட்டிஷார் சென்ற பல வருஷங்களாக ஒப்புக் கொள்ள மறுத்து வந்த ஓர் உண்மையை — அலெக்ஸாண்டர் கொஞ்சங்கூடப் பயம் இல்லாமல் தைரியமாக ஒப்புக் கொண்டிருக்கிறார்.

அலெக்ஸாண்டர் துரை ஒப்புக் கொண்ட மேற்படி உண்மை என்னவென்றால், இந்தியாவிலுள்ள மைனாரிட்டிகளில் பெரும்பான்மையோர் — அதிலும் முக்கியமாக, தாழ்த்தப்பட்ட மக்கள் — காங்கிரஸையே ஆதரிக்கிறார்கள் என்பதாகும்.

இதுவரை பிரிட்டிஷ் சர்க்கார் இந்திய மைனாரிட்டிகளை இந்திய சுதந்திரத்துக்கு விரோதமாக உபயோகித்து வந்தார்கள். "நாங்கள் இந்தியாவை விட்டுப் போனால் எட்டுக் கோடி ஹரிஜனங்களை யார் காப்பாற்றுவது? கிறிஸ்தவர்களை யார் காப்பாற்றுவார்கள்? பார்ஸிகளுக்கு யார் படியளப்பார்கள்?" என்று ஒவ்வொரு இந்தியா மந்திரியும் ஒவ்வொரு வைசிராயும் சொல்வது வழக்கம். ஆனால் இப்போது முதல் முறையாக ஒரு பிரிட்டிஷ் மந்திரி உண்மையை ஒப்புக்கொண்டிருப்பது பாராட்டத் தக்க விஷயம்.

## விளங்காத விஷயம்

மேற்படி மைனாரிட்டிகள் சம்பந்தமான மறுக்க முடியாத உண்மையை ஆளும் வர்க்கமான பிரிட்டிஷ்காரர்கள் ஒப்புக் கொண்ட போதிலும், இந்தியாவிலுள்ள சில கட்சியில்லாத் தலைவர்களும்-அங்கத்தினர்கள் இல்லாத கட்சிகளும் இன்னும் பலமாக எதிர்க்கின்றன. எதிர்ப்பதுடன் மாத்திரம் நில்லாமல் சத்தியாக்கிரகமும் செய்யத் தொடங்கியிருக்கின்றன. அத்தகையவர்களில் நம்முடைய மாஜி நிர்வாக சபை அங்கத்தினர்களில் ஒருவரான டாக்டர் அம்பேத்கரும் ஒருவர். 'தென்னை மரத்திலே தேள் கொட்டப் பனைமரத்திலே நெறி கட்டிற்று' என்பதுபோல, பிரிட்டிஷ் மந்திரி சபை அளித்த திட்டத்தின் மேலே அதிருப்தி கொண்ட டாக்டர் அம்பேத்கரும் அவருடைய கோஷ்டியினரும் பம்பாய் மாகாண சட்ட சபையின் முன்னால் சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்கியிருக்கிறார்கள். எதற்காகப் பூனாவில் அம்மாதிரியான இயக்கத்தை நடத்த வேண்டும் என்பதுதான் யாருக்கும் புரியவில்லை. ஒரு வேளை டாக்டர் அம்பேத்கருக்குக் கூடப் புரிகிறதோ என்னவோ?

டாக்டர் அம்பேத்கரைப் போன்ற ஒரு பெரும் பிரமுகர் சத்தியாக்கிரகத்தில் இறங்கியிருக்கிறார் என்றால் அது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமேயாகும். ஆனால், அந்தச் சத்தியாக்கிரக இயக்கத்துக்கு மூல புருஷர் காந்திஜி என்பதை டாக்டர் அம்பேத்கர் உணர வேண்டும். காந்தி மகானைத் தம்முடைய ஜன்ம சத்துருவாகக் கருதி அவருடைய கொள்கைகளையும் சேவைகளையும் இதுவரை கண்டபடி தாக்கி வந்த டாக்டர் அம்பேத்கர் இப்போது அந்த மகானுடைய ஆயுதத்தைத் தாம் உபயோகிப்பதாகச் சொல்வது அவருக்குக் கௌரவக் குறைவல்லவா?

# நிகழ்ச்சிச் சித்திரம்















-உம்மன்







இந்தியத் தொழிலாளர் சமூகம் தபால்காரர்களுக்குச் சாதகமாக நிற்பது சென்ற செவ்வாய்க்கிழமை பொது வேலை நிறுத்தத்திலே தெரிய வந்தது.

அதிகார வர்க்கம்

# ஊருக்கு இளைத்தவர்கள்!

ஒரு தகப்பனார் தமது அருமைப் பெண்ணுக்கு வரன் தேடிக்கொண்டிருந்தார். ஒரு நாள் அவருடைய சிநேகிதர் ஒருவரைச் சந்தித்தார். "ஏதாவது வரன் தெரிந்தால் சொல்லுங்களேன்!" என்றார். "அதற்கென்ன பிரமாதம்? நானும் என் குமாரிக்காக வரன் தேடி வருகிறேன். பத்துப் பதினைந்து வரன்களின் ஜாதகங்கள் கைவசமிருக்கின்றன. உங்களுக்கு எது பிடித்தமோ அதைப் பார்க்கலாம்" என்றார் சிநேகிதர்.

இரண்டு பேருமாய் வரன்களைப்பற்றி ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள்.

"இந்தப் பையன் என்ன செய்கிறான்!"

"இவனுக்கு சர்க்கார் உத்தியோகம். ஸெக்ரடரியட்டில் வேலை!"

"அப்படியானால் பார்க்கலாம். சர்க்கார் உத்தியோகம் என்றால் எப்படியும் உயர்வுதான்!"

"அது சரி: இந்த ஜாதகத்தைப் பாருங்கள். இவனுக்கு ரயில்வேயில் உத்தியோகம்."

"ரயில் உத்தியோகமா? கட்டாயம் பார்க்கலாம். சமீபத்தில் சம்பளம்கூட உயர்ந்திருக்கிறதாம்."

"இந்தப் பிள்ளையாண்டான் தபால் இலாகாவில் வேலை பார்க்கிறான்."

"ஓகோகோ! ரொம்ப பேஷாய்ப் போச்சு! இவனையே பார்க்கலாமே?"

"இவன் பி. எல். பாஸ் செய்துவிட்டு வக்கீலிடம் ஜூனியராயிருக்கிறான்."

"பி. எல்.லும் வேண்டாம்! கி. எல்.லும் வேண்டாம். வேறே இருந்தால் சொல்லுங்கள்!"

"இந்தப் பையனுக்கு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் உத்தியோகம்."

"எப்படியாவது இந்த வரனைத்தான் முடிக்க வேண்டும். யார் கண்டார்கள்? ஒரு நாளைக்கு இந்தப் பையன் டால்மியா, பிர்லா, அழகப்பச் செட்டியார் போல ஆனாலும் ஆகலாம்."

"இவனுக்கு அவ்வளவு படிப்பு இல்லை. ஒரு கவர்ன்மெண்ட் கண்டிராக்டரிடம் ஏஜெண்டாயிருக்கிறான்!"

"அடி சக்கை! இன்ஷ்யூரன்ஸைக் காட்டிலும் இதுவே தேவலை. இன்றைக்குக் கண்டிராக்டரிடம் ஏஜெண்டாயிருப்பவன் நாளைக்குக் கண்டிராக்டராகலாம். வாய்த்துக் கொண்டால் வருஷத்திலே லட்சம் இரண்டு லட்சம் சம்பாதித்து விடலாம்!"

"இந்தப் பையன் மெடிகல் காலேஜில் படிக்கிறான்."

"வேறொன்றும் பலிக்கா விட்டால் இந்த வரனைப் பார்ப்போம்."

"இவன் கிராமத்திலே மிராசுதார்; நிலம் நீச்சு இருக்கிறது."

"அப்புறம் எடுத்து வையுங்கள்!"

"இவன் பள்ளிக்கூட வாத்தியார்!..."

"சிவ சிவா! ராம ராமா! போயும் போயும் பள்ளிக்கூட வாத்தியாருக்குக் கொண்டுபோய் யாராவது பெண்ணைக் கொடுப்பார்களா? அவ்வளவு நிர்க்கதியான நிலைமைக்கு நான் இன்னும் வந்து விடவில்லை!"

• • •

ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி என்பதாக முற்காலத்தில் பழமொழி வழங்கி வந்தது. இந்த நாளில் மேற்படி பழமொழியை "நாட்டிலே இளைத்தவர்கள் பள்ளிக்கூட வாத்திமார்கள்!" என்று மாற்றிக் கொள்ள வேண்டியதுதான்.

அநேக உத்தியோக வர்க்கங்களுக்கு இந்தக் காலத்தில் சம்பள விகிதம் உயர்ந்திருக்கிறது. சர்க்காரே உயர்த்தியிருக்கிறார்கள். அப்படி உயர்த்தப் படாத இனத்தவர்கள் கிளர்ச்சி செய்து உயர்த்திக் கொள்கிறார்கள். கூட்டம் போடுகிறார்கள்; கோஷம் மிடுகிறார்கள்; வேலை நிறுத்த நோட்டீசு கொடுக்கிறார்கள்; வேலை நிறுத்தமே செய்கிறார்கள். கடைசியாக, ஒன்றுக்கு முக்கால் பங்காவது காரியத்தைச் சாதித்துக்கொள்கிறார்கள்.

உத்தியோகஸ்தர்களைப் போலவே தொழிலாளர்களும் அவ்வப்போது கிளர்ச்சி செய்தும், கட்டுப்பாடாக வேலை நிறுத்தங்கள் செய்தும் தங்கள் நிலைமையை உயர்த்திக் கொள்கிறார்கள்.

ஆலைத் தொழிலாளிகள், நகர சுத்தித் தொழிலாளிகள், ரயில்வேத் தொழிலாளிகள், தபால் தொழிலாளிகள், தோட்டம் தொழிலாளிகள், சலவைத்

தொழிலாளிகள்—இப்படியாகப் பத்திரிகையை என்றைக்குப் பிரித்தாலும் தொழிலாளர் தங்களுடைய பொருளாதார நிலைமையை உயர்த்திக் கொள்வதற்காகச் செய்யும் முயற்சிகள் காணப்படுகின்றன.

அவர்களுடைய முயற்சிகளுக்கெல்லாம் பொது மக்களின் ஆதரவும் தாராளமாகக் கிடைக்கிறது.

வேலை நிறுத்தத்துக்குப் போதிய காரணம் உண்டா என்பது சந்தேகத்துக்கிடமாயிருக்கும் காரியங்களிலும் பொது ஜனங்கள் தொழிலாளரின் கட்சியைப் பலமாக ஆதரித்து நிற்கிறார்கள்.

தங்களுக்கு நேரும் அசௌகரியங்களைக் கூடக் கவனியாமல் தொழிலாளர்களின் சம்பள உயர்வுக் கோரிக்கைகளை ஆதரிக்கிறார்கள்.

உதாரணமாக, தபால் தொழிலாளிகளின் வேலை நிறுத்தத்தைப் பாருங்கள். இந்த வேலை நிறுத்தத்தினால் பொது ஜனங்களுக்கு எவ்வளவோ அசௌகரியம். ஆனால் அதையெல்லாம் ஜனங்கள் பொருட்படுத்தவில்லை.

சர்க்கார் பிரசார இலாகாவானது, "பொது ஜனங்களே! கேளுங்கள்! ஒரு போஸ்டுமேனுக்கு மாதம் ரூபாய் 50 முதல் 60 வரையில் கிடைக்கிறது. இன்னும் அதிகம் கொடுத்தால் தபால் கார்டின் விலையை உயர்த்தி உங்கள் தலையிலே தான் போடவேண்டியிருக்கும்!" என்று எவ்வளவோ சாமர்த்தியமான பிரசாரம் செய்தும் பலிக்கவில்லை.

சென்ற புதன்கிழமை நாட்டில் எங்கே பார்த்தாலும் தபால் தொழிலாளிகளை ஆதரித்து வேலை நிறுத்தம் நடைபெற்றதை நேயர்கள் அறிவார்கள்.

தேசத்தின் பொது நிலைமை இப்படியிருக்க.—ஊருக்கு இளைத்தவர்களாய், வாயில்லாப் பூச்சிகளாய், கேள்விமுறையின்றிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பவர்கள் பள்ளிக்கூட ஆசிரியர்கள் தான்.

• • •

ஆசிரியர்களின் சம்பள விகிதத்தைப் பற்றிக் காதினால் கேட்டால் நாராசமாயிருக்கிறது. அச்சிட்டிருப்பதைக் கண்ணால் பார்த்தால் கண்ணைப் பொத்திக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது.

ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர்களில் ஹையர் கிரேட் ஆசிரியர்களுக்கு ஆரம்பச் சம்பளம் மாதம் 20 ரூபாய்! ஸெகண்டரி கிரேட் ஆசிரியர்களுக்கு ஆரம்பச் சம்பளம் மாதம் 25 ரூபாய்!

இரண்டு வருஷத்துக்கு ஒரு ரூபாய் வீதம் அவர்களுக்குச் சம்பள உயர்வு கிடைக்கிறது!!

அதாவது இருபது வருஷம் வேலை செய்து தலை நரைக்கும்போது மாதச் சம்பளம் 30 ரூபாய் ஆகிறது!

மேலே சொன்ன சம்பள விகிதம் சர்க்கார் நேரே நடத்தும் பள்ளிக்கூடங்களுக்குத்தான். சர்க்கார் உதவி பெற்றுத் தனிப்பட்டவர்கள் நடத்தும் (எயிடட்) பள்ளிக்கூடங்களில் சம்பள விகிதம் 14 ரூபாயும் 18 ரூபாயுந்தான்!

தயவு செய்து கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

இந்தப் பஞ்ச காலத்திய குறைந்த ரேஷன் விகிதப்படி ஒரு ஆசாமிக்கு மாதம் ஏழு பட்டணம் படி அரிசி கிடைக்கும்.

ஒரு குடும்பத்திலே புருஷன் மனைவி வயதான தாய் அல்லது தந்தை குழந்தைகள் ஆகக் குறைந்த பட்சம் ஐந்து ஜீவன்கள் இருந்தே தீரும்.

ஐந்து பேருக்கு அரை வயிறு நிரப்பக் கூடிய ரேஷன் விகிதப்படி 35 பட்டணம் படி அரிசி வாங்கியாக வேண்டும்.

35 பட்டணம் படி அரிசியின் கண்ட்ரோல் விகித விலை தற்காலம் சுமார் ரூ 15-0-0.

அரிசிக்கு மட்டும் ரூ 15-0-0 செலவாகிவிட்டால், அப்புறம் உப்பு, பருப்பு, புளி, மிளகாய், கறிகாய், சர்க்கரை, காப்பிக் கொட்டை, சட்டை, தலைப்பாகை, புடவை, துணிமணிகள், வீட்டு வாடகை, கூட்டுக் கூலி, கல்யாணம் கார்த்திகை, திவசம், பண்டிகை, பிள்ளைகளுக்குப் புத்தகம், பள்ளிக்கூடச் சம்பளம், வியாதி வந்தால் வைத்தியச் செலவு, சலவைக் கூலி, க்ஷவரக் கூலி, பத்திரிகைச் சந்தா ஆகிய இன்றியமையாத மற்றச் செலவுகளுக்கெல்லாம் என்னத்தைச் செய்வது?

இப்படிப்பட்ட அவசியமான செலவுகளுக்கெல்லாம் கையிலே பணம் இல்லையென்றால், ஒரு மனுஷனுடைய மனதில் எப்படி நிம்மதியிருக்கும்? மனதில் நிம்மதியில்லாத மனுஷர் பள்ளிக்கூடத்திலே பிள்ளைகளுக்கு என்ன விதமாகப் பாடம் சொல்லிக் கொடுப்பார்?

• • •

சென்ற புதன் வியாழன் தினசரிப் பத்திரிகைகளில் தபால் இலாகா சிப்பந்திகளின் சம்பள விகிதங்களைச் சர்க்கார் விளம்பரமாக வெளியிட்டிருந்தார்கள். அந்த விகிதப்படி பெரிய நகரங்கள் அல்லாத சின்ன ஊர்த் தபால்காரர்களுக்கு மாதச் சம்பளம் ரூ. 18-0-0 பஞ்சப்படி ரூ. 14-0-0 தன்னடத்தைப் படி ரூ. 12-0-0 இவற்

றோடு புதிய தீர்ப்பின் படி ரூ. 9-6-0 ஆக ரூ. 53-6-0 கிடைக்கிறது.

இது போதாது என்றுதான் இப்போது வேலை நிறுத்தமும் கிளர்ச்சியும் செய்து வருகிறார்கள். பொது மக்களும் அவர்களை ஆதரித்து நிற்கிறார்கள்.

ஆனால், ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர்களின் நிலைமை என்ன?

அவர்கள் செய்யும் வேலை தபால் சிப்பந்திகளின் வேலையைக் காட்டிலும் முக்கியமற்றது என்றோ, சுலபமானது என்றோ சொல்ல முடியுமா?

அவர்களுக்கு மட்டும் தரித்திரம் பிடித்த சம்பள விகிதமும் அதைவிடத் தரித்திரமான பஞ்சப்படி 16 ரூபாயும் ஏன் மாறாத நிலையாக இருக்க வேண்டும்?

ஆரம்ப ஆசிரியர்களுக்குக் கொடுக்கும் சம்பள விகிதத்தைப் போலத்தான் மேலே ஹைஸ்கூல் உபாத்தியாயர்களின் சம்பளமும் இருக்கிறது.

தினசரிப் பத்திரிகைகளிலே வரும் உத்தியோகக் காலி விளம்பரங்களைப் பார்த்தோமானால், பள்ளிக்கூட உபாத்தியாயர்களுக்குத்தான் எல்லாரிலும் மிகக் குறைந்த சம்பளம் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

• • •

நாட்டிலே உள்ள மற்ற எல்லா உத்தியோக வர்க்கங்களையும் விட முக்கியமான, உபயோகமான வேலையைச் செய்கிறவர்கள் பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் என்று சொல்லலாம்.

ஏனெனில், அவர்கள்தான் நமது சின்னஞ் சிறு குழந்தைகளை உருப்படுத்தி, அவர்களுடைய அறிவை வளர்த்து, மனதை விசாலிக்கச் செய்து, அவர்களை வருங்காலத்துப் பிரஜைகளாகச் செய்கிறார்கள்.

தேசத்திலே உள்ள மற்ற எல்லா உத்தியோக வர்க்கங்களையும் விடக் கஷ்டமான வேலையைச் செய்பவர்கள் பள்ளிக்கூட உபாத்தியாயர்கள்தான்.

சின்னப் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பது, அதிலும் நாற்பது பிள்ளைகளை வைத்துக் கொண்டு வகுப்பு நடத்துவது எவ்வளவோ கஷ்டமான காரியம். அதற்கு எவ்வளவோ பொறுமையும் சகிப்பும் சாதுர்யமும் திறமையும் வேண்டும்.

பழைய கதை ஒன்று நேயர்களுக்குத் தெரிந்திருக்கலாம்.

ஆற்றோடு போய்க் கொண்டிருந்த ஒருவனைக் கரையிலேயே இருந்தவன் கையைப் பிடித்து இழுத்து, "நான் உன்னைக் கரை சேர்க்கிறேன். நீ என் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறாயா?" என்றான்.

"ஐயோ! வேண்டாம்! நான் ஆற்றோடேயே போகிறேன்!" என்று கையை விடுவித்துக் கொண்டு அவன் ஆற்றோடேயே போய்விட்டான்!

இந்தக் கதை மிகப் பழைய கதை. இதிலிருந்து சிறு பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பது எவ்வளவு கஷ்டமான காரியமென்பதை முற்காலத்திலேயே உணர்ந்திருந்தார்கள் என்று தெளிவாகிறது.

இந்தக் காலத்திலோ அதைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

மற்ற உத்தியோக வர்க்கங்களையும் தொழிலாளி வர்க்கங்களையும் போல் உபாத்தியாயர்கள் தங்களுடைய சொந்த நலன்களுக்காகக் கிளர்ச்சி செய்ய முன் வருவதில்லை.

இதற்குக் காரணம் முதலாவதாக, பள்ளிக்கூடங்களிலேயே அவர்களுடைய மனோ சக்தி தேக சக்தி எல்லாம் செலவழிந்து, வெளியில் வரும் போது அவர்கள் உடல் சோர்ந்து உள்ளம் சோர்ந்து வருவதுதான்.

இரண்டாவது காரணம், ஆசிரியர்களின் பொறுப்பு உணர்ச்சியாகும்.

---

உபாத்தியாயரின் வீட்டில் உப்பில்லை, புளி யில்லை, சர்க்கரை, காப்பிக் கொட்டை இல்லை. எனவே, பையனுடைய தலையில் மூளை இல்லை யென்று உபாத்தியாயருக்குத் தோன்றுகிறது! தலையிலே ஓங்கிக் குட்டி மூளையை உண்டாக்கப் பார்க்கிறார்!!



மற்றவர்களைப் போல் பள்ளிக்கூட ஆசிரியர்கள் சம்பள உயர்வு கோரி வேலை நிறுத்தம் செய்வது, ஊர்வலம் போவது, கோஷம் இடுவது முதலிய காரியங்களைச் செய்தால், பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கு ஒரு தீய உதாரணமாகும் என்றும், பள்ளிக்கூடங்களில் இப்போது உள்ள கட்டுப்பாடும் குலைந்து விடுமென்றும் கருதுகிறார்கள்!

இப்படிக் கடமையை உணர்ந்து நடந்து கொள்வதற்காக ஆசிரியர்களை நாம் பாராட்ட வேண்டும்; அவர்களுடைய கட்சியைப் பொதுமக்களே எடுத்துக்கொண்டு போராட வேண்டும்.

அதற்குப் பதிலாக, பள்ளிக்கூட ஆசிரியர்களை ஊருக்கு இளைத்தவர்களாகப் பாவித்து அவர்களை அலட்சியம் செய்வது பாவம்; அவர்களுக்கு அநீதி செய்வது கொடுமை.

ஆசிரியர்களுக்குச் சமூகம் செய்யும் அநீதியும் கொடுமையும் ஒன்றுக்குப் பத்து மடங்காகிச் சமூகத்தையே திருப்பப் பாதிக்கும்.

வீட்டிலே தரித்திரம் பிடுங்கித் தின்றால் சாதாரண மனிதன் எவனுக்கும் கோபமும் ஆத்திரமும் பொங்குவது இயல்பு. அந்தக் கோபத்தையும் ஆத்திரத்தையும் மற்றவர்கள் மேல் காட்டுவதும் இயல்புதான்.

உபாத்தியாயர்களுடைய வீட்டிலே தரித்திரம் பிடுங்கித் தின்றால், குடும்ப வாழ்க்கையிலே ரகளையாகத்தான் இருக்கும். அதன் பயனைப் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் அநுபவிக்க நேரிடும்!

குழந்தைகள் நன்றாகப் படித்து நல்ல குணங்களைப் பயின்று நல்ல பிரஜைகளாக வேண்டும் என்றால் அதற்கு அடிப்படை பள்ளிக்கூட ஆசிரியர்கள் பிள்ளைகளிடம் அன்புடனே நடந்து கொள்வதுதான்.

எரிந்து விழுகிற ஆசிரியர்களிடம் படிக்கும் பிள்ளைகளுக்கு, முதலாவது பாடம் சரியாக வராது; இரண்டாவது, குணம் சரியாக அமையாது; மூன்றாவது வருங்காலத்தில் அவர்கள் நல்ல பிரஜைகளாவது அபூர்வம்.

ஆசிரியர்கள் பிள்ளைகளிடம் அன்பாக இருக்க வேண்டுமென்றால் அவர்களுக்கு வீட்டுத் தொல்லை இருக்கக் கூடாது. கௌரவ ஜீவனத்துக்கு அவசியமான சம்பள விகிதம் அவர்களுக்கு ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

சமூகத்தின் நன்மைக்காக இதைச் செய்யவேண்டும்; சின்னஞ் சிறு குழந்தைகளின் க்ஷேமத்துக்காக இதைச் செய்யவேண்டும்; வருங் காலத்தில் பாரத நாட்டின் மகோந்நதத்துக்காக இதை அவசியம் செய்ய வேண்டும்.

* * *

ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர் எவருக்கும் மாதம் நாற்பது ரூபாய்க்குக் குறைந்த சம்பளம் கொடுக்கக் கூடாது. அப்படிக் கொடுப்பது அநீதி, கொடுமை; நம்முடைய குழந்தைகளுக்கு நாம் செய்யும் துரோகம்.

தற்போதைய பஞ்ச நிலைமை நீடிக்கும் வரையில் மாதச் சம்பளத்தில் பாதியாவது பஞ்சப்படி கொடுக்க வேண்டும். குறைந்த பட்சம் வருஷத்திற்கு மூன்று ரூபாய் விகிதமாவது சம்பளம் உயர்த்த வேண்டும்.

இதை யொட்டி ஹைஸ்கூல் ஆசிரியர்களுக்கும் சம்பள விகிதத்தை ஏற்படுத்த வேண்டும். பி. ஏ. எல். டி.களுக்கும் தமிழ் வித்வான்களுக்கும் மாதம் 80 ரூபாய்க்குக் குறைந்த சம்பளம் ஏற்படுத்துவது அநியாயம்.

பள்ளிக்கூட ஆசிரியர்கள் தங்களுடைய சம்பள உயர்வுக்காகக் கிளர்ச்சி செய்யவோ, வேலை நிறுத்தம் செய்யவோ, ஊர்வலம் சென்று கோஷமிடவோ அவசியம் ஏற்படக்கூடாது.

அவர்களுக்காகச் சமூகமே மேற்படி கிளர்ச்சியை நடத்த வேண்டும்.

* * *

நமது கல்வி மந்திரி உத்தியோகம் ஏற்றுக்கொண்ட புதிதில் உபாத்தியாயர்களின் நிலைமையை நினைத்து உருகிக் கண்ணீர் விடுவதாகச் சொன்னார். மாதம் மூன்று ஆகியும் நாளது வரையில் காரியம் ஒன்றும் நடைபெறவில்லை.

வரப்போகும் வரவு செலவுத் திட்டத்திலாவது பள்ளிக்கூட ஆசிரியர்களுக்குச் சம்பளம் உயர்த்தும் விஷயம் கவனிக்கப்பட்டிருக்கும் என்று நம்புகிறோம்.

# ★ வட்ட மேஜை ★

தியாகராயநகர்
21—7—46

ன்புமிக்க "கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

ஜூலை 21உ கல்கியில் தாங்கள் எழுதி ள்ள "என்ன பாவம் செய்தன?" என்னும் ட்டுரையைத் தமிழன் என்ற முறையிலும் ந்தை என்ற முறையிலும் மனமுவந்து ரவேற்கிறேன்.

மங்கலம் என்பதற்குத் தாங்கள் தரும் றுதி உதாரணம் மிகவும் பொருத்தமானது.

தமிழ் மொழியில் எண்ணிறந்த நூல்கள் ருக்கின்றன. ஆயினும் ஒரே ஒரு நூலுக் த்தான் நல்ல நூல் என்று பெயர்.

எங்கள் ஆசிரியர் அதை நன்னூல் என்று றி எங்களுக்குக் கற்பிக்க ஆரம்பித்ததும், ஆகா! இதுவா நல்ல நூல்? இந்தப் பெயர் தற்கு ஏற்பட்டது எப்படி?" என்று ங்கள் எண்ணினோம். பின்னும் ஆசிரியர் ங்கலவழக்கு என்னும் விஷயத்தைக் கூறிய பாதுதான் நன்னூல் என்று பெயர் வழங்கு தன் காரணத்தை உணர்ந்தோம்! பொல் ாத நூலாக இருப்பதாலேயே நன்னூல் ன்று பெயரிட்டிருப்பதாக அறிந்தோம்!!

பொல்லாத நூலை நன்னூல் என்று கூறி ங்களை ஏமாற்ற முயன்றாலும் எங்கள் ஆசிரியருடைய முயற்சியை எல்லாம் நாங்கள் றியடித்து விட்டோம். ஆசிரியர் வந்ததுமே ாதில் பஞ்சை வைத்து அடைத்துக் கொண் டோம். இந்த முறையினால், ஆசிரியர் எங்கள் ளையில் திணித்துவிட முயன்ற பூதங்களை ங்கள் சம்ஹாரம் செய்துவிட்டோம் என் பதை இப்பொழுது நினைத்தால் கூடச் சந்தோஷம் பொங்கி வருகின்றது.

நாங்கள் 3-வது பாரம் வந்தபின்பே இலக்கணம் கற்க ஆரம்பித்தோம். ஆனால் இப்பொழுதோ இரண்டாவது வகுப்புப் படிக்கும் பால்மணம் மாருத செக்களிடமே அந்தப் பிசாசைக் கொண்டுவந்து விடுகிறீர்கள். இதற்கென்ன காரணம்? நாளுக்கு நாள் இரக்கமின்மை கூட வருகின்றதா? இரக்கமில்லாதவர்களைப் பற்றி என்ன கூறுகிறார் கம்பர்? 'அரக்கர்' என்றல்லவா கூறுகிறார்? அவர்கள் இலங்கையில் வாழ்வதை விட்டுவிட்டு இந்த நாட்டுக்கே வந்து குடியேறி விட்டார்களோ?

இலக்கணம் கல்லாதவர்கள் எல்லோரும் இலக்கணம் அறியாதவர்களோ? இலக்கியத்தைச் சரியாகக் கற்றால் இலக்கணம் தானே தெரிந்து விடாதோ?

என் குழந்தைகளை இலக்கணம் படிக்க வேண்டாம் என்று நான் ஆரம்பத்திலேயே கண்டிப்பாகத் தடுத்து விட்டேன். இலக்கணம் கற்ற குழந்தைகளைவிட இலக்கணப் பிழையில்லாமல் எழுதுகிறார்கள் அவர்கள்.

கல்விப் பயிற்சி என்னும் பெயரால் தமிழ் நாட்டில் நடந்துவரும் குழந்தைகளின் சித்திரவதையைத் தடுக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதற்காகத் தங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

அன்பன்

பொ. திருகூடசுந்தரம், எம். ஏ. பி. எல்.
(ஆசிரியர், "தமிழ் ஹரிஜன்")




டிராம், பஸ் ஸ்டிரைக் தினத்தில் அட்வகேட்டுகள் கோர்ட்டுக்குப் போகிறார்கள்!

# இராணுவ உதவி!







"ராமஸ்வாமி ஐயர் என்பது நீர்தானே?"
"இல்லையே இல்லை! அடுத்த வீட்டில் விசாரியுங்கள்!"

பக்கத்து வீட்டுக்காரர் :—அதோ விழுந்து அடித்து ஓடுகிறாரே, அவர் தான் ராமஸ்வாமி ஐயர்!







"ஏன் ஐயா அப்படித் தலைதெறிக்க ஓடினீர்? உம்முடைய பேர்தான் ராமஸ்வாமி அய்யராமே?"

"லொக்ஜூர் ஸார்! நானொரு குற்றமும் செய்யவில்லையே!" "அதனால் பாதகமில்லை. இந்த லெட்டர் உமக்கா இல்லையா என்று பாரும்!"

# கம்பர் தரும் காட்சி

**டி.கே.சி.**

## 148. ஆசை போகவில்லை !

சூர்ப்பனகைக்கு நேர்ந்த புன்பாட்டையும் அவமானத்தையும் கண்டு கரனுக்கு அடங்காத கோபம் வந்தது. ராமன் மேல் அரக்க வீரர்கள் போர் தொடுத்து எல்லாரும் மாண்டார்கள். கடைசியில் கரனும் வந்தான். கடும்போர் புரிந்தான். ஆனாலும் ராமபாணங்கள் செய்த அருஞ் செயல்களால் கரனது தேர் அழிந்து, வலது கை அறுபட்டு, கடைசியில் இடது கையும் தலையுமே அறுபட்டு விழுந்தன. எல்லாம் வெற்றிகரமாய் முடிந்து உதய சூரியன் போல் விளங்குகிறான் ராமன்.

முனிவர்கள், ஆனந்தக் கூத்தாடினவர்களாய், ராமனைச் சூழ்ந்து கொண்டார்கள். அந்தக் குழாத்துடனேயே ராமன் புறப்படுகிறான். எங்கே?

முனிவர் வந்து
  முறைமுறை மொய்ப்புற,
இனிய சிந்தை
  இராமனும் ஏகினான்,—
அனிக வெஞ்சமத்(து)
  ஆருயிர் போகத்,தான்
தனியிருந்த
  உடல்அன்ன தையல்பால்

[முனிவர் வந்து முறை முறை மொய்ப்புற: முனிவர்கள் தொகுதி தொகுதியாக வந்து சூழ்ந்து கொள்ள: இனிய சிந்தை இராமனும் ஏகினான்: மிக்க உவகையுடன் ராமனும் புறப்பட்டான்: அனிக வெஞ்சமத்து: அரக்கர் படை படையாக வந்து செய்த போருக்கு: ஆர் உயிர் போக: ஆருயிராகிய ராமன் போய்விட: தான் தனி இருந்த உடல் அன்ன தையல்பால்: உடல் மாத்திரம் தனியாய்த் தங்கி இருந்தது என்று சொல்லும்படியான சீதை இருந்த இடத்தை நோக்கி — ராமன் புறப்பட்டான்.

குறிப்பு:—உயிர் பிரிந்த உடலைப்போல் இருந்தாள் சீதை. அந்த உடலை நோக்கித் திரும்பி வந்தது உயிர் என்பது விஷயம்.]

இறந்து பட்ட அரக்கர்களுடன் நெருங்கிப் போர் செய்தபோது அவர்களது உடலிலிருந்து பொங்கி வழிந்த இரத்தத்தினால் ராமன் கால்கள் கறை ஏறி இருந்தன. அரக்கர்களை ஓடி ஓடித் துரத்திய காரணமாகத் தூசியும் படிந்திருந்தது அந்தக் கால்களில்.

விண்ணில் நீங்கிய
  வெய்யவர் மேனியின்
புண்ணின் நீரும்
  பொடிகளும் போயுக,
அண்ணல் வீரனைத்
  தம்பியும் அன்னமும்
கண்ணின் நீரினிற்
  பாதம் கழுவினர்.

[விண்ணில் நீங்கிய வெய்யவர் மேனியின்: வான நாட்டை அடைந்த அதாவது இறந்து பட்ட அரக்கரது உடம்பிலிருந்து வழிந்தோடிய; புண்ணின் நீரும்: இரத்தமும்: பொடிகளும்: தூசியும்; போய் உக: அறவே நீங்கும்படி; அண்ணல் வீரனை: ராமனுகிய வெற்றி வீரனை: தம்பியும் அன்னமும்: லக்ஷ்மணனும் சீதையும்; கண்ணின் நீரினில்: கண்ணீரைப் பொழிந்து.]

ஒரு முகூர்த்த நேரத்திலேயே அரக்கர் எல்லாரும் அழிந்து பட்டார்கள். அவர்கள் உடம்பிலிருந்து சிந்திய இரத்தம் பெருக்கெடுத்தது. நாலா திசையும் போய் முட்டியது போலத் தோன்றியது. இதைக் கண்ட வானவருக்கு எக்களிப்பு இப்படி அப்படியா இருக்கும்?

மூத்தம் ஒன்றில்
  முடிந்தவர் மொய்புனீர்
நீத்தம் ஓடி
  நெடுந்திசை நேர்உறக்,
கோத்த வேலைக்
  குரல்என வானவர்
ஏத்த, வீரன்
  இனிதிருந் தானரோ.

[மூத்தம் ஒன்றில்: ஒரு முகூர்த்த நேரத்தில் (ஒன்றரை மணி நேரத்தில்): முடிந்தவர் மொய்புண் நீர் நீத்தம் ஓட: இறந்துபட்ட அரக்கரது சல்லடையாய்ச் செறிந்த புண்ணிலிருந்து வடிந்த இரத்தப் பெருக்கானது ஓட: தெறித் திசை நேர்கூற: தூரத்தில் நாலா திசையும் பரவ: கோத்த வேலைக் குரல் என: எதிர் எதிரே பாய்ந்த சமுத்திரங்களின் கோஷத்தைப் போல: வானவர் ஏத்த: முனிவர்கள் வாழ்த்த.]

ராமனும் அவனது வெற்றியும் இவ்வாறு இருந்தன.

அங்கே, சூர்ப்பனகை வயிற்றிலே அடித்துக்கொண்டாள். இறந்து கிடந்த கரனைத் தழுவிக் கொண்டு இரத்தத்தில் அப்படியும் இப்படியுமாகப் புரண்டாள்.

இங்கிவ் வாறெனா
நின்ற(து); இராவணன்
தங்கை தன்கை
வயிறுத கர்த்தனள்;
கங்குல் அன்ன
கரனைத் தழீஇ,நெடும்
பொங்கு செங்குரு-
திப்புரண் டாளரோ!

[இங்கு இவ்வாறெனா நின்றது: ராமனது காரியம் இப்படி முடிந்து நிற்கிறது: ராவணன் தங்கை சூர்ப்பனகையோ—தன்கை வயிறு தகர்த்தனள்: கையினால் வயிற்றில் அடித்ததை இன்னது என்று சொல்ல முடியாது: கங்குல் அன்ன கரனைத் தழீஇ: இருள் பிழம்பு போலக் கிடந்த கரனது உடலைத் தழுவியவளாய்: நெடும் பொங்கு செங்குருதிப் புரண்டாள்: விசாலமாகப் பரந்து பொங்கிப் பொங்கி வந்த இரத்தத்திலே புரண்டாள்; அரோ: அடடா! என்ன விதமாகப் புரண்டாள்!]

அப்படியும் இப்படியுமாகப் புரண்டு கொண்டே புலம்புகிறாள் சூர்ப்பனகை. "மனசிலே ஆசையை உண்டாக்கி வளர்த்து விட்டேன். என் மூக்குப் போய் விட்டது. அதோடு அந்த ஆசையும் தொலைந்து போயிருக்கக் கூடாதா? உங்களிடத்தில் வந்து குறைகூறவும் செய்தேனே" என்று அலறுகிறாள்.

'ஆக்கி னேன்மனத்(து)
ஆசை,அவ் ஆசைஎன்
மூக்கி னோடு
முடிய முடிந்திலேன்,
வாக்கி னால்உங்கள்
வாழ்வையும் நாளையும்
போக்கி னேன்கொடி—
யேன்' என்று போயினாள்.

[வாழ்வையும் நாளையும்: உல்லாசமான வாழ்க்கையையும் ஆயுளையும்: போயினாள்: அந்த இடத்தை விட்டு ஓடிப்போனாள்.]

கடலையே கலக்குகிற சூறாவளியானது சுற்றிச் சுற்றி அடித்துக் கடைசியில் ஒரு முகமாய்ப் பாய்ந்து ஓடும் காற்றாகிறது. அந்தக் காற்றின் வேகம் அபாரம். அத்தகைய வேகத்தோடு போகிறாள் சூர்ப்பனகை. அவள் போகிறதைப் பார்க்கும்போது அரக்கர்களுக்கு உலை வைக்கத்தான் போகிறாளோ என்று சொல்லத் தோன்றுகிறது.

அலங்கல் வேல்க்கை
அரக்கரை, ஆசறக்
குலங்கள் வேர்அறப்—
பான்குறித்(து),—ஆழ்கடல்
கலங்கு சூறையின்
வன்நெடுங் கால்என,
இலங்கை மாநகர்
நொய்தில்சென் றெய்தினாள்.

[அலங்கல் வேல்க்கை அரக்கரை: சதா வெற்றிமாலை தலையில் சூடிக் கையில் வேல் ஏந்திய அரக்கர்களை: ஆசறக் குலங்கள் வேர் அறப்பான் குறித்து: ஒரு பிராணி இல்லாமல் தடைத்தமாறின குடும்பங்கள் குடும்பங்களாக வேர் அறுக்க எண்ணியவள் போல: ஆழ்கடல் கலங்கு சூறையின்: ஆழமான சமுத்திரமே கலங்கும்படி வீசும் சூறாவளியிலிருந்து புறப்படும்: வன் நெடும் கால் என: அபார சக்தியோடு பாய்ந்து ஓடும் புயல்காற்றைப் போல: இலங்கைமாநகர்: இலங்கைப் பட்டணத்தை: நொய்தில் சென்று எய்தினாள்: வெகு விரைவாகப் போய்ச் சேர்ந்து விட்டாள்.]

பஞ்சவடி மேற்கே பம்பாப் பக்கம் இருக்கிறது. இலங்கைத் தீவோ வெகு தூரத்தில் தெற்கே இருக்கிறது. ராமாயணத்திலுள்ள இந்தப் பூமி சாஸ்திரத்தை ரொம்பவும் நுட்பமாகக் கணக்கிட்டுவிடக் கூடாது. பள்ளிக்கூடத்துக் கணக்கு வேறு, இதிகாசக் கணக்கு வேறு!

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எம். என். மணி, எஸ்பிளனேட், சென்னை.

# எங்கும் பட்டினி என்பதே பேச்சு

அமெரிக்காவிலிருந்து வந்த பஞ்சக் கமிஷன் கோஷ்டியார், தென்னிந்தியாவில் தங்கள் வேலையைச் சுறுசுறுப்பாக ஆரம்பித்து விட்டார்கள். மூன்று மோட்டார்களில் விரைந்து சென்று செங்கற்பட்டு ஜில்லாவில் ஒரு சொட்டு ஜலமும் இல்லாத பொட்டல் ஏரியைப் பார்வை யிடுகிறார்கள்.

தண்ணீர் ததும்பி நின்ற ஏரியில் தற்போது ஆடு மாடுகள் கட்டாந் தரையைக் கிளறிக் கொண்டு நிற்கின்றன.

இந்த ஏரி மதகு வழியாக ஒரு காலத்தில் குபுகுபு என்று ஜலம் பாய்ந்தது. இப்போது ஒரே மணல் வெள்ளமாய்க் காட்சி தருகிறது.

போட்டோ: டைக்டர் டங்கன்


நாளொரு எலும்பும் பொழுதொரு நரம்பு மாய்த் தேய்ந்து வரும் இந்த ஏழைச் சிறு வர்கள் காலையில் எழுந்ததும் கால் வயிற்றுக் கஞ்சிக்குக் காத்துக் கொண்டு நிற்கிறார்கள்.




கஞ்சித் தண்ணி காய்ச்சி ஆகிறது.


அந்தக் கஞ்சித் தண்ணியில் இந்த நாயும் பங்குபெறக் காத் துக் கொண்டு நிற்கிறது.



இந்தக் கொட்டிக்காரச் சிறுவன் கஞ்சிக்குக் காத்திராமல் வாய்க்கால் தண்ணீரைக் குடித்தே வயிற்றை நிரப்பிக் கொள்கிறான்.





பசிப் பிணியோடு துணிப் பஞ்சமும் பிடித்திருக்கும் இந்தப் பாதைப் பிள்ளைகள் ஏதோ பஞ்சக் கமிஷன் வருகிறதென்று கேட்டதும் 'கஞ்சி வரதப்பா!' என்று காத்துக் கொண்டிருக்கிருர்கள்.

★

பகல் எல்லாம் வயலில் பாடு பட்டு உழைத்த கிழவனைத் தேடி அவன் பெண்சாதி அன்புடன் கொண்டு வந்த கஞ்சித் தண்ணீர் அவனுக்கு அமிர்தமாக இருக்கிறது

நாட்டிலே பஞ்சந் தீர உண்மையில் பாடு பட்டு உழைக்கும் பாட்டாளி மக்கள் இவர்களே யல்லவா?

பஞ்சத்தைப் பார்க்க வந்தவர்கள் கூடையிலுள்ள வேர்க் கடலையைப் பார்த்து விடப் போகிறார்கள் என்று பயந்து பையன் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறான்!

"ஆண்டவனே! கங்கையும் காவேரியும் பாயும் இந்தப் பாரத நாட்டில், அன்னதானத்துக்குப் பேர்போன இந்தப் புண்ணிய பூமியில், மக்கள் பஞ்சத்தால் வாடும் பரிதாபத்துக்கு விமோசனமே இல்லையா?" என்று இந்தப் பெரியவர் காலைக் கதிரவனைக் கைகூப்பிப் பிரார்த்திக்கிறார்!



மணியம்

# கிடைப்பது சொற்பமே யாகும்போது

# —சிறந்தவைகளையே பார்த்து வாங்குங்கள்!

இந்தியாவின் எல்லா மில்லுகளையும் போலவே நாங்களும், சர்க்கார் கட்டுப்பாடுகளனுசரித்து முக்கியாவசியமான துணி ரகங்கள் மட்டுமே தயாரித்து வருகிறோம். எனினும், எங்களது தற்பொழுதைய ட்ரில்கள், ட்வில்கள், கோட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், லாங்கிலாத்து — எல்லாம், பக்கிங்ஹாம் & கர்னடிக் மில்ச் சரக்குகளின் நிரந்தர எடுத்துக்காட்டுகளாயிருந்து வந்துள்ள அதே உழைப்புத் தன்மையும், இழை நேர்மையும் வாய்ந்தவைகள்தான்.

உலகிலெங்குமே தலைவிரித்தாடும் இந்த ஜவுளிப் பஞ்சத்தின்போது, கிடைக்கும் சொற்பத் துணிமணிகளைக் கொண்டு இன்னும் பல காலம் சமாளித்து வருவதை விடுத்து நம்மனைவருக்கும் வேறு கதிமோக்ஷமில்லை. இப் பஞ்சகாலத்தில், உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமதி கிடைக்க, கீழே காணும் வர்த்தக முத்திரைகளை அறிகுறியாகக் கொண்ட பக்கிங்ஹாம் & கர்னடிக் மிர்ச் சரக்குகளையே, சாத்தியமாகும்போதெல்லாம் மறவாமல் வாங்குங்கள்.



**யுத்தகாலம்**

சென்ற ஆறாண்டுகளில் நாங்கள் சர்க்காருக்கு 43,20,00,000 கஜம் துணி சப்ளை செய்திருக்கிறோம். ஆனது, யுத்த காரியங்களுக்காக வுள்ள எங்களது துணி யுற்பத்தி வருடத்தில் 41,000 மைலைக் காட்டுகிறது. ஏழெட்டு மாதம் கூடுகையிலுள்ள உற்பத்தியானது நம் பூமியை ஒரு தரம் சுற்றிக் கட்டப் போதுமான நீளம் வருமென்றால் பாருங்களேன்!



பக்கிங்ஹாம் & கர்னடிக் மில்ஸ்தான் 1900-ல் இந்தியாவில் காக்கித் துணி சேவை முதன் முதலாக ஆரம்பித்தவர்கள், யுத்தகாலத்தில் அவர்கள் எப்போதும், ஏராள பொறுப்பை மேற்கொள்ளத்தான் செய்திருக்கிறார்கள்.

**சமாதான காலம்**

எங்களது இன்றைய உற்பத்தியளவு மாதம் 60,00,000 கஜங்களுக்கு மேலாகவே வரும். ஆனால் ரயில் போக்கு வரவுக் கஷ்டங்களால், சில தூர ஸ்தலங்களுக்கு எங்களால் சரக்குகள் தாராளமாக விநியோகிக்க முடிவதில்லை.

இரசாயனப் பொருட்களுக்கும் சாயங்களுக்கும் ஏற்பட்டுள்ள பஞ்சம் காரணமாக, யுத்தத்திற்கு முன் ஜனங்களின் மனதைக் கொள்ளை கொண்டிருந்த அனேக ரகங்களும், மற்றும் பற்பல கலர் டிஸைன்களும் தயாரிப்பது சாத்தியமாகாம லிருக்கிறது. ஆனால், இந்தத் தடை தாற்காலிகமென்றே நம்புகிறோம்.

இதற்கிடையே, நாங்கள் ஏராளமாகத் தயாரிக்கும் அவசிய துணி ரகங்கள் உங்கள் உபயோகத்திற்குகந்தவைதான்-நீடித்துழைக்கவும் செய்யும்.

சர்க்கார் கட்டுப்பாடு அமுலுக்கு வருவதற் கெத்தனையோ முன்பு, நாங்கள் விலைகளை மலிவாக்கியே யிருந்தோம். எங்கள் சரக்குகள் கட்டுப்பாடு விலைகளில், உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமதியாகவே இன்னும் பெரும்பாலு மிருந்து வருகின்றன.

## தி பக்கிங்ஹாம் & கர்னடிக் கம்பெனி, லிட்.,

## சென்னை

மானேஜிங் ஏஜண்டுகள்: **பின்னி & கோ., (சென்னை) லிட்.**

# அசட்டுப் பெண்

வேங்கடலட்சுமி

"அம்மா!"

ஊஞ்சற் பலகையில் உட்கார்ந்தபடி ராமாயணம் வாசித்துக் கொண்டிருந்த ரங்கம்மாள் தலை நிமிர்ந்து பார்த்தாள். பிரமாதமாக அலங்கரித்துக் கொண்டிருந்த அவள் பெண் ருக்கு, எதிரே நின்று கொண்டிருந்தாள்.

"நீ வரவில்லையா அம்மா, சினிமாவுக்கு?"

"முடியாதம்மா! வீட்டில் ஏகப்பட்ட வேலையிருக்கு!"

"போ, அம்மா! எப்போதும் உனக்கு வேலைதான்! நீ வராவிட்டால் நானும் போகவில்லை!"

ரங்கம்மாள் சிரித்தாள். தன் பெண்ணின் சிறுபிள்ளைத்தனம் அவளுக்கு வேடிக்கையாயிருந்தது. அதற்குள் வாசலில் 'மோட்டார் ஹார்ன்' சத்தம் கேட்டது. ருக்மணியின் கணவனான ராஜாராமன் காரிலிருந்து இறங்கி உள்ளே வந்தான்.

"தயாராய் விட்டீர்களா, ருக்கு?—போவோமா?"

"அம்மா வரவில்லையாம்!"

"ஏன்? தமிழ்ப் படமாச்சே! பாட்டுகள் கூட ரொம்ப நன்றாயிருக்கின்றன என்று எல்லாரும் சொல்லிக் கொள்ளுகிறார்கள்!"

"அதற்கென்ன, பார்த்துக் கொண்டால் போச்சு!—எனக்கு மத்தியானமெல்லாம் ஒரே தலைவலி; வீட்டிலும் இன்றைக்கு ரொம்ப வேலையிருக்கு! நீங்கள் இரண்டு பேரும் போய்விட்டு வாருங்கள்!"

"அப்படியானால் சரி, ருக்கு! வா, போவோம்!" என்று கூறிக்கொண்டே வாசலை நோக்கித் திரும்பினான் ராஜாராமன்.

"நிச்சயமா நீ வரவில்லையா, அம்மா!" என்றாள் ருக்கு மீண்டும்.

ரங்கம்மாளுக்குச் சிரிப்பு வந்தது. "போடி, அசடு! நீ மட்டும் போய் விட்டு வா; நான் அப்புறம் பார்த்துக் கொள்கிறேன்!" என்றாள்.

ருக்மணி லஜ்ஜையுடன் சிரித்துக் கொண்டே போய்க் காரில் ஏறிக் கொண்டாள். கார் கண்ணுக்கு மறைந்தபின் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்தாள் ரங்கம்மாள்.

புஸ்தகத்தை மூடி வைத்துவிட்டு ஏதோ யோசிக்கலானாள். பத்து வருடங்களுக்கு முன்பு நடந்தவை அவை.

★

"ரங்கம்! ரங்கம்!"

கூடத்துத் தூணில் சாய்ந்து உட்கார்ந்தபடி ஏதோ யோசித்துக் கொண்டிருந்த ரங்கம்மாள், தன் தகப்பனாரின் குரல் கேட்டு எழுந்தாள். கையில் பிரித்துப் பிடித்த கடிதத்துடன் உள்ளே வந்தார் அவள் தந்தை சிவராமய்யர்.

"உன் மைத்துனனிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. அவன் பெண்ணுக்குக் கல்யாணமாம்; எல்லாரையும் புறப்பட்டு வரும்படி எழுதியிருக்கிறான்."

"அப்படியா! எப்போது முகூர்த்தமாம்?"

"அடுத்த மாதம் ஒன்பதாம் தேதியாம். ஜவுளி எடுப்பதற்காக இன்னும் ஒரு வாரத்திற்கெல்லாம் அவன் பட்டணம் வருகிறானாம். அப்பொழுது உன்னையும் தன்னுடன் அனுப்ப முடியுமா வென்று கேட்டிருக்கிறான். கல்யாணக் காரியங்களுக்கு ஒத்தாசையா யிருப்பா யென்று எண்ணமா யிருக்கும்!"

ரங்கம்மாள் பெருமூச் செறிந்தாள். "ஹூம்...பார்க்கலாம்; இன்னும் ஏழெட்டு நாட்கள் இருக்கிறதே!" என்று சொல்லிக் கொண்டே அவள் உள்ளே போய்விட்டாள்.

அவள் மனம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியது. "ஹூம்......இப்படி யெல்லாம் ஆகுமென்று யார் கண்டார்கள்? அவர் போகும்பொழுது எனக்கும் குழந்தைக்கும் ஒரு குறையும் வைக்கவில்லை. ஒன்று, இரண்டா?—ரொக்கம் ஐம்பதினாயிரம் ரூபாய் பாக்கியிருந்தது. கல்லுக் கல்லாய் இரும்புப் பெட்டி நிறைய நகைகள்! நான்தான் பைத்தியக்காரி; மைத்துனனை நம்பக் கூடாது என்று எல்லாவற்றையும் இங்கே கொண்டு வந்து கொட்டினேன்! — லாபமென்ன? சமுத்திரத்தில் பெருங்காயம் கரைத்தது போலாச்சு!—

ஆமாம்; பண விஷயத்தில் யாரையுமே நம்பக் கூடாது!—அப்பாவாவது, அம்மாவாவது!—எல்லாம் இப்பொழுதுதானே தெரிகிறது? கல்யாணத்துக்குப் போவதாயிருந்தால் குழந்தை ருக்குவையும் அழைத்துக்கொண்டுதான் போக வேண்டும்.—அனுக் நகைகளெல்லாம் எங்கே என்று கேட்டால் என்ன சொல்லுவது? ஐயோ, ஈசுவரா! எனக்கு ஒன்றுமே தெரியவில்லையே!" என்றெல்லாம் எண்ணி அவள் ஏங்கிக்கொண்டிருந்தபோது, காமிரா அறையிலிருந்து கொட்டாவி விட்டுக்கொண்டே வெளியே வந்தாள் பாகீரதியம்மாள். அவள் தான் ரங்கத்தின் தாயார்.

"ஏண்டி, ரங்கம்! மணி ஐந்து ஆகிறதே, பசங்களெல்லாம் பள்ளிக்கூடத்திலிருந்து வந்து விடாதோ? — காப்பி, பலகாரம் எப்போ பண்ணுவது?"

"இதோ போறேன், அம்மா!—காப்பி போடவும், சமைத்துப் போடவும்தானே நான் பெண்ணாய்ப் பிறந்திருக்கிறேன்?" என்று அலுத்துக்கொண்டே எழுந்து போய் அடுப்பை மூட்டினாள் ரங்கம்.

"வாயைப் பாரு, வாயை! தெரிஞ்சுதான் தெய்வம் மண்ணைப் போட்டிருக்கு!" என்று முணுமுணுத்துக் கொண்டே பாகீரதியம்மாள் ஊஞ்சலில் உட்கார்ந்தாள்.

★

ரங்கத்தின் கணவன் இறக்கும்பொழுது அவளுக்கு இருபது வயது ருக்மணி இரண்டு வயதுக் குழந்தை. வேண்டிய சொத்து வைத்துவிட்டுப் போனார் அவளுடைய கணவர்.

ரங்கத்தின் தகப்பனுக்கு அவ்வளவாக வரும்படி கிடையாது. வீடு நிறையக் குழந்தைகள். மிகவும் கஷ்ட ஜீவனம். இந்த நிலையில் தம்முடைய மூத்த பெண் வீட்டுக்கு வந்தபொழுது, அவள் கொண்டு வந்த பணத்தை யெல்லாம் பிறகு கொடுத்து விடலாம் என்ற எண்ணத்துடன் அவ்வப்பொழுது எடுத்துச் செலவழிக்கலானார். ரங்கத்தைக் குழந்தையுடன் தங்களிடமே வந்துவிடும்படி அவளுடைய மைத்துனன்மார் கூப்பிட்டார்கள். பணமெல்லாம் அவர்கள் வசமாகி விடுமென்ற எண்ணத்துடன் ரங்கத்தின் பெற்றோர் அவளை அனுப்ப மறுத்துவிட்டார்கள். அவளுக்கும் அங்கு போய் இருப்பதில் அப்போது அவ்வளவாக இஷ்டமிருக்கவில்லை.



ரங்கம்மாளின் மைத்துனர்கள் இருவரும் நல்ல நிலைமையில் இருந்தார்கள். குழந்தை ருக்மணியின் பேரிலிருந்த பாசத்தால் அவர்கள் அடிக்கடி பட்டணம் வந்து மதனியிடம் குழந்தையையும் பார்த்து விட்டுப் போனார்கள்.

எப்படியோ பத்து வருடங்கள் ஓடி விட்டன. ருக்மணியின் கல்யாணப் பேச்சு எழுந்தது. அப்பொழுதுதான் ரங்கத்துக்குத் தன்னுடைய பணம் முக்கால் வாசிக்குமேல் கரைந்து விட்டது தெரிய வந்தது. தம்பிகளுடைய படிப்புக்கும், தங்கையின் கல்யாணச் செலவுக்கும் தன்னுடைய பணம்தான் உபயோகமாயிற்று என்று தெரிந்ததும், ரங்கத்தின் மனம் சொல்லொணாத வேதனையடைந்தது. பணமில்லாமல் ருக்மணியை நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுப்பது சிரமமாயிருக்குமே என்று அவள் வருந்தினாள். போதாக் குறைக்கு அவளுடைய நகைகளும் அநேகமாகப் போய்விட்டன. இரண்டொரு சில்லறை நகைகளைத் தவிர மற்றவைகளையெல்லாம் அவளுடைய தகப்பனார் விற்று விட்டிருந்தார். தம்பிமார்களெல்லாம் மேற்படி பணம், நகைகள் இவற்றைப் பற்றித் தங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று கூறிவிட்டார்கள்.

பணம் இருக்கும் வரையில் வீட்டுக்கு எஜமானியாயிருந்து வந்த ரங்கம்மாள் இப்பொழுது வேலைக்காரியாகி விட்டாள்!

இதன் பயனாகப் பெற்றோருக்கும் பெண்ணுக்கும் இடையே கொஞ்சங் கொஞ்சமாக மனஸ்தாபம் வளர ஆரம்பித்தது. இந்த நிலையில்தான் கல்யாணத்துக்கு வரும்படியாக ரங்கம்மாளின் மைத்துனனிடமிருந்து கடிதம் வந்தது.

★

அன்று மாலை ருக்மணிக்குத் தலை வாரிக்கொண்டே ரங்கம்மாள் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்தாள். வீட்டில் அவளைத் தவிர வேறு யாருமில்லை.

வாசலில் ஜட்கா வண்டி வந்து நின்றது. ரங்கம்மாளின் மைத்துனனான நடராஜன் வண்டியை விட்டு இறங்கியதும், "மன்னி!" என்று அழைத்துக் கொண்டே உள்ளே வந்தான்.

"வாருங்கள், வாருங்கள்!" என்று உபசரித்துக் கொண்டே மரியாதையாக எழுந்து நின்றாள் ரங்கம்மாள்.

கையில் கொண்டு வந்த பொட்டணத்தை நீட்டியபடி, "ருக்கு! இதோ, பார்! உனக்குப் பட்டுப் பாவாடை!" என்று சிரித்துக் கொண்டே அவளை அருகில் கூப்பிட்டு உட்கார வைத்துக்கொண்டான் நடராஜன். பிறகு, "மன்னி! ருக்கு மளமளவென்று வளர்ந்து விட்டாளே!" என்றான் அவன்.

"வயசு பதினாறு நிறையப் போறதே!" என்றாள் ரங்கம் புன்சிரிப்புடன்.

ருக்மணி வெட்கத்துடன் தலையைக் குனிந்து கொண்டாள். "ஊம்...... அண்ணா மாதிரி நல்ல உயரம் இவள்; சிவப்பு, ஜாடை எல்லாம் அண்ணாவேதான்!— அவன் தான் இருந்து பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை!" என்றான் நடராஜன் வாடிய முகத்துடன். ரங்கம்மாள் பெருமூச்சு விட்டபடியே, "என்னுடைய துர்ப்பாக்கியம் அது!" என்றாள் கலங்கிய கண்களுடன்.

சற்று நேரம் இருவரும் ஒன்றும் பேசவில்லை. பிறகு நடராஜன், "மன்னி! நாளைக் காலை நான் ஊருக்குப் போகிறேன். உன்னைக் கையோடு அழைத்து வந்துவிடும்படி பார்வதி நூறு தரம் சொல்லி அனுப்பினாள். கல்யாணக் காரியங்களெல்லாம் நீ வந்துதான் நடக்க வேண்டும்; வேறு பெரியவர்கள் யாரும் கிடையாது. என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டான்.

"சொல்லுவதென்ன? உங்கள் கடிதத்தைப் பார்த்தவுடனே வருவதாகத் தீர்மானித்து விட்டேன்!"

நடராஜனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இதற்கு முன் அவன் எவ்வளவோ விசேஷங்களுக்கு அவளை எத்தனையோ முறை வந்து கூப்பிட்டிருக்கிறான். அப்பொழுதெல்லாம் ரங்கம்மாள் அவனுடைய வீட்டிற்கு வர முடியாதென்று மறுத்து விட்டாள். குழந்தை ருக்மணியையாவது ஒரு மாதம் கூட்டிக் கொண்டுபோய் வைத்திருந்து அனுப்புகிறேன் என்று கேட்டபொழுது கூட, ரங்கத்தின் தகப்பனார் முடியாதென்று கூறிவிட்டார். அதற்கெல்லாம் நேர் விரோதமாக அல்லவா இப்பொழுது இருக்கிறது!

ஒரு நிமிஷம் இவ்வாறு எண்ணி வியந்த அவன் சட்டென்று சமாளித்துக் கொண்டு, "மன்னி! அப்படியானால், நாளைக் காலை ஏழு மணிக்கெல்லாம் நான் இங்கே வண்டியுடன் வந்துவிடுகிறேன். நீயும் ருக்குவும் புறப்படுவதற்குத் தயாராயிருங்கள்!" என்று சொல்லிவிட்டு எழுந்தான்.



மனைவி :—ரொம்ப நன்றாயிருக்கு. நீங்கள் கிராமபோனைச் சுற்றிச் சுற்றி ஓடறது! ராகம் தெரியலை என்றும், 'பிளேட்'டை வைக்கிறதுக்கு முந்தியே பார்த்து வைக்கக்கப்படாதோ!

அதே வாயால்தான் இப்பொழுது அவ்வாறு பேசினான்!

"ஆமாம்; பணத்தையெல்லாம்தான் செலவழித்தாச்சே! இனிமேல் என்னைக் குறித்து அவர்களுக்கு என்ன கவலை?" — இவ்வாறு எண்ணிய ரங்கத்துக்குக் கோபமும் துக்கமும் பொங்கி வந்தன. புறப்படும் சமயத்தில் வீண் மனஸ்தாபம் வேண்டாமென்று தன்னுடைய ஆத்திரத்தை யெல்லாம் அடக்கிக் கொண்டாள்.

"சாப்பிட்டுவிட்டுப் போகலாமே!—ருக்கு! சித்தப்பாவுக்குக் காப்பி கொண்டு வந்து கொடு, அம்மா!" என்றாள் ரங்கம்.

"சாப்பாடு வேண்டாம்; எனக்கு இன்னும் ஏகப்பட்ட வேலை யிருக்கு!" என்று கூறிக்கொண்டே, ருக்கு கொண்டு வந்து கொடுத்த காப்பியைச் சாப்பிட்டு விட்டுக் கிளம்பி விட்டான் நடராஜன்.

*

அன்றிரவு தன் மைத்துனன் வந்திருந்ததைப் பற்றிப் பெற்றோரிடம் தெரிவித்தாள் ரங்கம். பாகீரதியம்மாள் முகத்தைச் சுளித்துக்கொண்டு, "என்ன அதிசயமாம்? லோகத்திலே இதெல்லாம் வழக்கந்தான்! போறவா போனா, கூடப் பிறந்த அண்ணா, தம்பி இருக்கிறவாளுக்குச் செய்யறது உண்டுதான்!" என்றாள்.

இந்த வார்த்தைகள் ரங்கத்துக்குச் சுருக்கென்று பட்டன. முன்னெல்லாம் நடராஜன் தன்னைக் கூப்பிட வந்தபோது, "நன்னா யிருக்கு; இனிமே இவளுக்கு அங்கே என்ன வேலையாம்? தெய்வந்தான் அடியோடு மண்ணை வாரிப் போட்டுடுத்தே! எங்க கட்டை இருக்கிற மட்டும் இங்கேயே யிருக்கட்டும்! நாங்கள் குடிக்கிற கஞ்சியோ, கூழோ அவளுக்கு விடறோம்! அப்புறம் பார்த்துக்கொள்ளலாம். இப்போது ஒன்றும் அங்கே யெல்லாம் போய் இடிசோறு தின்ன வேண்டாம்!" என்பாள் பாகீரதியம்மாள்.

மறுநாள் காலை ஏற்கெனவே கூறியபடி நடராஜன் வந்து ருக்குவையும் ரங்கம்மாளையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு போய் விட்டான். போகும்பொழுதுகூட, "எப்பொழுது திரும்புவாய்?" என்று ரங்கத்தின் பெற்றோர் அவளை ஒரு வார்த்தை கேட்கவில்லை!—ரங்கம்மாளின் மனதிலோ இனிமேல் பிறந்தகத்துக்குத் திரும்பி வரும் எண்ணமே கொஞ்சங்கூட இல்லை.

நடராஜனின் மனைவியான பார்வதி, ரங்கத்தினிடம் மிகவும் பிரியமா யிருந்தாள். அவள் குழந்தைகளோ, "பெரியம்மா! பெரியம்மா!" என்று அவளுடைய காலைச் சுற்றிக்கொண்டே யிருந்தன.

சித்தப்பாக்கள் இருவரும் ருக்குவிடம் பிராணனை வைத்திருந்தார்கள்.

"மன்னி! இனிமேல் கல்யாணக் காரியங்களைப் பற்றி எங்களுக்குக் கவலையே யில்லை!" என்று ஓர்ப்படிகள் இருவரும் ரங்கத்தினிடம் நூறு தடவை சொன்னார்கள்.

முகூர்த்தத்துக்கு நாலைந்து நாட்களிருக்கும். பட்டணத்திலிருந்து நடராஜன் வாங்கி வந்திருந்த ஜவுளி தினுசுகளைப் பார்வை யிட்டபடியே எல்லாரும் கூடத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

"மன்னி! என் மைத்துனன் ராஜாராமனை நீ பார்த்திருக்கிறாயா?" என்றாள் இளைய மைத்துனனுடைய கமலாபதி.

"இல்லையே!" என்றாள் ரங்கம்.

"சரிதான்; நாளைக்கு வருகிறான், பார்த்துக் கொள். கண்ணுக்கு லட்சணமா யிருப்-

பான்; பட்டணத்திலே நல்ல வேலை; பி. ஏ. பாஸ் செய்திருக்கிறான். நம்ம ருக்குவை அவனுக்குப் பார்க்கலாமென்பது எங்களுடைய அபிப்பிராயம்."

"பேஷாய்ப் பாருங்களேன்!—என்னைக் கேட்பானேன்?" என்றாள் ரங்கம்மாள்.

மறுநாள் காலை அங்கு வந்த ராஜாராமனைக் கண்டதும் ரங்கத்துக்கு மிகவும் திருப்தியாயிருந்தது.

அதே முகூர்த்தத்தில் நடராஜனுடைய பெண்ணான கமலத்துக்கும், ரங்கத்தின் பெண்ணான ருக்குவுக்கும் கல்யாணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.

தன் கணவன் இருந்து பார்க்கவில்லையே என்ற ஒரு குறையைத் தவிர, ரங்கத்துக்கு வேறு ஒரு குறையுமில்லை.

ருக்மணியின் கல்யாணச் செலவை யெல்லாம் கணபதியே ஏற்றுக் கொண்டான். ரங்கம்மாளிடம் அவர்கள் அதைக் குறித்துப் பேச்சே எடுக்கவில்லை. அவளாக ஏதோ கூறியபொழுது, "மன்னி! இப்படி யெல்லாம் நீ வித்தியாசமாக எண்ணுவது நன்றாயில்லை!" என்றார்கள்.

அதைக் கேட்டு ரங்கம்மாள் பூரித்துப் போனாள். "ஆகா! இத்தனை நாளும் இப்படிப்பட்ட தங்கமான மனிதர்களுடைய முகாலோபனம் கூடப் பண்ணாமலிருந்தேனே!" என்று எண்ணியபோது அவளை வெட்கம் பிடுங்கித் தின்றது.

★

"அம்மா! அம்மா!"

திடுக்கிட்டு எழுந்த ரங்கம், ஓடிப் போய்க் கதவைத் திறந்தாள்.

"தூங்கி விட்டாயா, அம்மா?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தாள் ருக்கு.

"படம் ரொம்ப நன்றாயிருந்தது; நீங்கள் வராமலே இருந்து விட்டீர்களே!" என்றான் ராஜாராமன்.

"அவன்தான் அசடு என்றால், அவனுக்கு வாய்த்தவனும் அசடாயிருக்கிறானே!" என்று தனக்குள் எண்ணிச் சிரித்தாள் ரங்கம்.

## சம்பிரதாயம்!



கடைக்காரன் :—இந்தப் பெண் பிள்ளைகளே இப்படித்தான்! கடையிலுள்ள எல்லாப் புடவைகளையும் எடுத்துப் போடச் சொல்வது; பிறகு ஒன்றும் வாங்காமல் போவது!

# THE *ONLY* GUM-DIPPED TYRE



கம்-டிப்பிடு டயர் இது ஒன்றுதான்

காரை ஓட்டுவது, நிறுத்துவது, திருப்புவது ஆகியவை டயர்களின் மூலம் தான் என்பதை நீங்கள் அறிவீர்களா? கூடுதலான விலை யில்லாமல், மிக்க பாதுகாப்புடன் அதிக மைல்கள் ஓடி உழைக்கும் உன்னதமான பயர்ஸ்டோன் கம்-டிப்பிடு டயர்களையே வாங்குமாறு வற்புறுத்துங்கள்.

# Firestone

பயர்ஸ்டோன்

F. 17-46

# ஒரு கடிதம்

ரங்கு

அந்தக் கடிதத்தை ராவ்சாகிப் சோமசுந்தரம் ரொம்பவும் சிரமப்பட்டு எழுதிவிட்டுத் திரும்பவும் ஒரு முறை படித்துப் பார்த்தார் :

*சிரஞ்சீவி அருணாசலத்துக்கு. அநேக ஆசீர்வாதம். இந்தக் கடிதம் உன் கைக்குக் கிடைக்கும்போது நான் இந்த உலகத்திலிருந்து விடுதலை அடைந்திருப்பேன். நான் இப்போது இருக்கும் நிலைமையில் வேறு யாரா யிருந்தாலும் நான் செய்ய இருக்கும் முடிவுக்குத்தான் வருவார்கள்.*

*நான் போனபின் குடும்ப நிலை மாறிப்போய் விட்டால் அதற்காக என்னை நிந்திக்காதே. செல்வத்திலேயே வளர்ந்த உனக்கு என் மரணத்தினால் என்ன கஷ்டம் நேரிட்டாலும் என்னை உத்தேசித்து அதைச் சகித்துக் கொள். எனது மனமார்ந்த ஆசீர்வாதங்கள்.*

இப்படிக்கு,

சோமசுந்தரம்.

ராவ்சாகிப் சோமசுந்தரத்தை நன்றாக அறிந்தவர்கள், அவர் தம் மகனுக்கு எழுதிய இந்தக் கடிதத்தைப் பார்த்தால் நிச்சயம் திகைத்துப் போவார்கள். ஆமாம்; அப்பேர்ப்பட்ட விவேகியான மனுஷன் இதைப்போன்ற அபத்தமான ஒரு காரியத்தைச் செய்வதற்குத் தீர்மானித்திருக்கிறார் என்றால் அதற்குத் தகுந்த காரணம் இருக்கவேண்டும் அல்லவா ?

*　　　*　　　*

சோமசுந்தரம் ஒரு காலத்தில் பிக்ஷாதிகாரியாக இருந்து லக்ஷாதிகாரியானவர். ஒரு லேவாதேவிக் கடையில் கணக்கெழுதிச் சம்பாதித்துக் குடும்பத்தை ரட்சித்தார். கையில் பணம் கொஞ்சம் சேர்ந்த பிறகு வியாபாரத் துறையில் இறங்கினார். இந்த யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன் பர்மாவில் மரக் கடை ஒன்றை வாங்கினார். அதில் மரம் அறுப்பதற்கென்று சீமையிலிருந்து யந்திரங்களை வரவழைத்து மில் ஒன்று வைத்தார். இந்த மில்லை நடத்த தம் ஒரே மகனை ரங்கூனுக்கு அனுப்பி வைத்தார்.

பர்மாவில் மரக் கடை வாங்கிய பிறகு அவரிடம் பணப் புழக்கம் குறைய ஆரம்பித்தது. இந்த யுத்தம் ஆரம்பித்த புதிதில் கம்பெனி 'ஷேர்'கள் விலை தூக்கி விற்றதைப் பார்த்ததும் அவருக்கும் சபலம் ஏற்பட்டது. ஷேர் மார்க்கெட்டில் பணம் பண்ணவேண்டும் என்றால் அதற்குப் பதினாயிரம், லட்சம் என்று பணம் வேண்டாமா ? அதற்காகத் தம்முடைய வீடுகளின் பேரில் ஏராளமாகக் கடன் வாங்கினார். கபந்தன் மாதிரி ஷேர் மார்க்கெட் பணம் விழுங்கிற்று. மேலும் மேலும் கடன் வாங்கி ஷேர்களை வாங்கி வைத்தார்.

இப்படியெல்லாம் அவர் பணம் பண்ண வழி செய்து கொண்டிருக்கும்போது தான் சிங்கப்பூர் ஜப்பானியர் வசமாகி, பர்மாவுக்குள் குள்ளர்கள் நுழைந்து விட்டார்கள் என்ற பேரிடி போன்ற செய்தி வந்தது. கிழக்கே யுத்தம் ஆரம்பமானவுடனே சாமர்த்தியமாக அவர் தம் மகனை மில்லை விற்றுவிட்டு வந்துவிடும்படி சொல்லியிருக்கலாம். ஆனால் பெரிய பெரிய ராஜதந்திரிகள் செய்த பிசகையே அவரும் செய்தார். இரும்புக் கோட்டை என்று பெயர் பெற்ற சிங்கப்பூரைத் தாண்டி யுத்தம் வராது என்று நினைத்து மோசம் போய்விட்டார்.

அதன் பலனாக ஐராவதி மரமில் போய், அதில் போட்ட பணமெல்லாம் போய், கைச் செலவுக்குக்கூட ஒன்றுமில்லாமல் அவர் மகன் அருணாசலம் மலேரியா வியாதியால் பாதி உடம்பாகி ஊர் வந்து சேர்ந்தான். மலேரியாவைச் சொஸ்தம் செய்ய அவர் செலவழித்த பணத்தைக் கொண்டு ஒரு ஆஸ்பத்திரியே கட்டியிருக்கலாம்.

யுத்தத்தில் பர்மாவில் விழுந்த குண்டை உண்மையில் சோமசுந்தரத்தின் குடும்ப சந்தோஷத்தில் விழுந்த குண்டு என்று தான் சொல்ல வேண்டும். அதிலிருந்து அவர் மனமே சரியாக இல்லை. எப்படியாவது பர்மாவில் இழந்த பணத்தைத் திரும்ப ஈடு செய்துவிட வேண்டும் என்று நினைத்தார்.

அப்போது தங்கத்தின் விலை விஷம் போல ஏற ஆரம்பித்தது. யுத்த ஆரம்பத்தில் இருபத்தொரு ரூபாயாக இருந்தது, அப்போது அறுபது ரூபாய்க்கு வந்து கொண்டிருந்தது. இன்னும் மேலே ஏறும் என்று சொல்லிக் கொண்டார்கள். இது சோமசுந்தரத்தின் காதுக்கும் எட்டாமற் போகவில்லை. ஷேர்களையெல்லாம் விற்றுப் பணம் சேகரித்தார். அதைக் கொண்டு தங்கத்தை வாங்கி அடுக்கினார்.

அத்துடன் சவிகவரன் திருப்தியடைந்ததாகத் தெரியவில்லை. யுத்தம் சீக்கிரம் முடிந்துவிடும் என்று யாரோ ஒரு பிரபல சன்னியாசி ஜோஸ்யம் சொன்னதாகப் பத்திரிகையில் போட்டிருந்தார்கள். அதனால் ஏற்பட்ட பிரத்தியட்சமான முடிவு என்னவென்றால்,

தங்கத்தின் விலை குறைய ஆரம்பித்தது. முதல் வார முடிவில் எழுபத்திரண்டு ரூபாய் விற்ற பவுன் மறு வாரம் நாற்பது ரூபாய்க்கு இறங்கிற்று. இதைக் கண்டு பீதியடைந்த ராவ் சாகிப் சோமசுந்தரம் வாங்கி வைத்திருந்த தங்கத்தையெல்லாம் ஒன்றுக்குப் பாதி தேறினால் போதும் என்று விற்று விட்டார்.

கடைசியில் அவர் கணக்குப் பார்த்ததில் கையில் இருந்த பணம், பங்களாக்கள் பேரில் வாங்கியிருந்த பணத்திற்கு ஒரு வருஷம் வட்டி கட்டத்தான் போதும் போல இருந்தது.

பழைய காலமாக இருந்தால் என்ன வந்தாலும் வரட்டும் என்று புதுச்சேரிக்கோ காரைக்காலுக்கோ போய்த் தலை மறைவாக இருக்கலாம். இன்றைக்கு அந்தமாதிரி இடம் ஒன்றும் கிடையாது. மானத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று இருந்தால் ஒரே ஒரு இடந்தான் உண்டு; அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு.

அது இந்த உலகத்தை விட்டுப் போய் விட வேண்டியதுதான்!

ராவ்சாகிப் சோமசுந்தரம் இந்தத் தீர்மானத்துக்கு வந்ததும் மனதைத் திடம் செய்துகொண்டு மேலே சொன்ன கடிதத்தை எழுதினார். அன்றையக் கட்டில் அதைச் சேர்த்து விடுவதற்காகத் தபால் ஆபீஸை நோக்கி விரைவாக நடந்தார்.

'டொடக்' என்று கடிதம் பெட்டியடியில் விழுந்தபோது அவர் மனதில் துணுக்கென்று பயத்தின் அலை மோதியது.

ஒரு நிமிஷம் தபால் பெட்டியைப் பார்த்துக் கொண்டு நின்றார். — ஐயோ! சாக வேணுமே என்ற பயமா? அல்லது பின்னால் என்ன நடக்குமோ என்ற உணர்ச்சியா?

வீடு வந்து சேர்ந்த சோமசுந்தரத்துக்கு இருப்புக் கொள்ளவில்லை. அவர் இனிமேல் செய்யவேண்டிய காரியத்தைப் பற்றி யோசனை செய்தார். இதுவரை நிச்சயம் செய்ததை நிறைவேற்ற வேண்டாமா? அதை எப்படிச் செய்வது? எந்த விதத்தில் செய்வது?

ஏதோ கால வித்தியாசத்தால் சிரமதசை வந்தால் பகவான் அதை நீக்காமல் போய் விடுவாரா? அதற்கு நாமாகச் செத்துப் போவதா? — இப்படி ஒரு எண்ணம் குறுக்கிட்டது. கடைசியாக, சோமசுந்தரத்தின் மனம் எதிர்த் திசையில் ஓட ஆரம்பித்தது. நல்ல வேளை! இப்போதாவது மனம் மாறிற்றே, கோழைத்தனமாக உயிர் விடுவதை விடத் தைரியமாகக் கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளலாம் என்று நினைத்தார்.

ஆனால், இந்த உயிர்விடும் யோசனையை மகனுக்கு எழுதி விட்டோமே? அதைப் பார்த்தால் அவன் என்ன நினைத்துக் கொள்வானோ?

இப்போது ஒன்றும் முழுகிப் போய் விடவில்லை. தபாலாபீஸுக்குப் போய் அருணாசலம் விலாசத்துக்கு எழுதிய கடிதத்தைத் திருப்பிக் கொடுங்கள் என்று கேட்டால் கொடுக்காமலா போய் விடுவார்கள்?

உடனே கொஞ்சம் கூடத் தாமதிக்காமல் மேல் வேஷ்டியை எடுத்துப் போட்டுக்கொண்டு கிளம்பினார்.

ஆனால், அதற்குள் அன்றையத் தபால்கள் எல்லாம் ரயிலுக்குச் சென்று விட்டன.

சோமசுந்தரத்துக்கு இன்னது செய்வது என்று தெரியவில்லை. அவர் மனம் நிலை கொள்ளாமல் தத்தளித்தது. அருணாசலத்துக்குத் தான் எழுதிய கடிதத்தைப் பார்த்ததும் தன்னுடைய கோழைத்தனம் வெளியாகலாம். தன் மேல் அவனுக்கு வெறுப்புண்டாகித் தான் எழுதிய கடிதத்தை அவன் நாலுபேரிடம் காட்டினால்...... சீச்சீ! அதைவிட அவமானம் வேறு உண்டா?...... நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம்!

கொஞ்ச நேரம் பிரமை பிடித்தவர் போல் ராவ்சாகிப் அங்கிருந்த ஒரு மொட்டைத் தென்னை மரத்தைப் பார்த்துக் கொண்டு நின்றார். பிறகு பொறையாற்றங் கரையை நோக்கி நடக்கலானார்.

இரண்டு மூன்று நாள் கழித்து, சென்னை தினசரிப் பத்திரிகை ஒன்றில் 'காலமானார்' என்ற தலைப்பின்கீழ்ப் பின்வரும் செய்தி பிரசுரமாகியிருந்தது:—

"நேற்று முன் தினம் ராவ்சாகிப் சோமசுந்தரம் பொறையாற்றுக்கு ஸ்நானம் செய்யச் சென்றவர் கால் தவறிச் சுழலில் விழுந்து காலமானார். அவர் பிரேதம் இரண்டு பர்லாங்குக்கு அப்பால் கண்டெடுக்கப்பட்டது. பெரிய தனவந்தரும் வியாபாரியுமான அவர் தம் மனைவியையும், மூன்று பெண்களையும், ஒரே மகனையும் பரிதவிக்க விட்டுச் சென்றார்."

பத்திரிகையில் செய்தி வெளியான அன்று ராவ்சாகிப் சோமசுந்தரத்தின் விலாசத்துக்கு ஒரு கடிதம் வந்தது. அது ராவ்சாகிப் தம்முடைய மகனுக்கு எழுதிய கடிதமேதான்! அவசரத்தில் விலாசம் சரியாக எழுதாத காரணத்தினால், அருணாசலத்துக்கு அவர் எழுதியிருந்த கடிதம் அவருடைய விலாசத்துக்கே மீண்டும் திரும்பிவந்து சேர்ந்தது!




கேரளா ஸோப் இன்ஸ்டிடியூட்
கள்ளிக்கோட்டை

## கூந்தல் வளர்ப்பு

என்பது பண்டைகாலத்தி லிருந்தே நம் நாட்டு ஸ்திரீ களால் கையாளப்பட்டு வரும் ஒரு சிறந்த பழக்கம்.




இதற்கு இன்றியமையாதது

## ஜாப்கோ
## ஹேர் குரோயர்

•

ஜயபாரதம் கோ.,
மல்லேஸ்வரம் - பெங்களூர்

# வான சஞ்சாரம்

இசைத் தேனீ

ஜூலை 3ல் சென்னையில் எஸ். வி. பார்த்தசாரதியின் ராகம் தானம் பல்லவிக் கச்சேரி வழக்கம்போல் களைப்பா யிருந்தது. காம்போதியை ஆலாபனை செய்து, தானம் பாடி, 'பரிமளரங்கபதே' பல்லவியில் தன் கைவரிசைகளை நன்கு காட்டினார்.

5ல் சென்னையில் டி. ஏ. வெங்கடராமய்யர், வி. கே. வைதயநாயகி, இவர்களின் கானங்கள் குறிப்பிடத் தக்கவை. முதல்வர் இழையும் நய சாரீரத்தில் நல்வழியுடனும் உணர்ச்சியுடனும், வாசஸ்பதி ராகத்தை வழங்கினார். வைதயநாயகி இனிய குரலுடன் தைரியமாய்ப் பாடினார். சங்கராபரணம் சிறப்பாயிருந்தது. சஞ்சாரக் கோவைகளை சிறிது கச்சிதப் படுத்திக் கொள்ள வேண்டும்.

6ல் சென்னையில் எம். எம். தண்டபாணி தேசிகரின் கச்சேரியில், கடைசி ராகமாலிகை வழக்கம்போல் மிக்க உயர்வாயிருந்தது. ஸிம்மேந்திர மத்யமம் ஒரே பிர்க்கா மயம். மந்தாரியும் மோஹனமும் வனப்பாயிருந்தன.

7ல் சென்னையில் நடந்த குன்னக்குடி வெங்கடராமய்யரின் ஒரு மணி நேரக் கச்சேரி இதற்கு முன் கேட்டவைகளைவிட அழகாயிருந்தது. சிறந்த ஞானமும், எதையும் தாம் நினைத்தபடி பிடித்துக் காட்டும் வல்லமையும் உடையவர். அவ்வல்லமையைச் சில சமயங்களில் மிகைப்பட்ட நவீனங்களைப் புகுத்த உபயோகிப்பதுண்டு. அன்றையக் கச்சேரியில் அதைக் குறைத்து, ஜனரஞ்சனி, ரஞ்சனி, காஹனப்ரியா ராகங்களை ஒழுங்காயும் நிதானமாயும் கையாண்டார். சங்கராபரணமும், பாகேச்வரியும் விசேஷ வனப்புடன் விளங்கின.

அன்று திருச்சியில் நடந்த சிதம்பரம் ஜயராம பிள்ளையின் கச்சேரியில் ஸாஹித்யத் தெளிவும் பாவப்பொழிவும் குறிப்பிடத் தக்கதாயிருந்தன. சுத்தசன்யாசி, ஹநுமதோடி, ஹம்ஸாநந்தி ராகங்களோடு, சாமந்தி, கம்பீரநாட்டை முதலிய அபூர்வ ராகங்களையும் வழங்கினர். அவரும் வேறு இருவரும் ரஞ்சனியைப் பாடியதிலிருந்து அன்றைய தினம் 'ரஞ்சனி நாள்' என்றே சொல்லலாம். 'தேவாதிதேவா' என்ற உருப்படியில் சந்தங்களை மிகைப்பட்ட அழுத்தத்துடன் விரித்து அடுக்கினர்.

சாதாரணமாய்க் கேட்கப்படாததும், ஆனால் முடுக்குகளில் உள்ளதுமான ராகங்களைக் கேட்க வேண்டுமானால் நாகஸ்வர வித்வான்களைத்தான் தேடிப் போக வேண்டுமென்பது, 8ல் திருச்சியில் என். கே. ராஜம், துரைக்கண்ணு இவர்கள் வாசித்த 'அக்னிகோபம்' என்ற ராகத்திலிருந்து தெரிய வந்திருக்கும். 20-வது மேளத்தில் ஜன்யமான ஷாடவ ஔடவ ராகம். ஸரிகம பநிஸ என்ற ஆரோஹண அவரோஹணத்தைக் கொண்டது. 'அக்னிகோபம்' என்ற பெயருக்குத் தக்கவாறில்லாது குளிர்ச்சியையும் வனப்பையும் காதில் விழுந்தது. ஷண்முகப்ரியா, சிந்துகன்னட ராகங்களும் அப்படியே.



வி. கே. வைதயநாயகி

8ல் திருச்சியில் நிகழ்ந்த மதுரை மணியின் மூன்று நேரக் கச்சேரி ஜோராய் விளங்கியது. ஷண்முகப்ரியா ராகமும் 'மரிவேரே' கிருதியில் அமைந்த நிரவல் ஸ்வரங்களும் அவரது கல்பனைச் சிறப்பை நன்கு விளக்கின. காமவர்த்தனி, பேகடா ராகங்களும் வனப்பாயிருந்தன. பிறாக்களில் சில விசித்திர வேலைப்பாடுகள் தென்பட்டன.

9ல் காலை, ஸ்டேஷன்களில் ரேடியோ மைக்கினால் தாங்க முடியாத சாந்திரமும் கனிப்பும் கொண்ட ஒரு பெண் குரல் சென்னையிலிருந்து கேட்டது. மூன்று ஸ்தாயிகளிலும் அதிக வேலைப்பாடுகளுடன் ஷண்முகப்ரியா, தோடி ராகங்களையும், சங்கதி வனப்புடன் உருப்படிகளையும் அலக்ஷியமாய் வாரி வீசின தைரியமே தனிச்சிறப்பு. பாடியவர் பாமா ஆடாமணி என்று அறிவிக்கப்பட்டது. மேல் ஸ்தாயி சஞ்சாரங்களில் குரலின் சாந்திரத்தைக் குறைத்து தாளக்குப் படுத்திக் கொள்வது நலம்.

10ல் திருச்சியில் சாரதா அனந்தராமன் மதுரமான குரலில் பிலஹரி, பைரவி, மோஹனம், காம்போதி இவைகளோடு ஹேமவதி ராகத்தையும் நாஸூக்காயும் வனப்பாயும் வழங்கியது கவனத்தை ஈர்த்தது.

11ல் திருச்சியில் வயலின் கச்சேரி செய்த கரூர் சின்னசாமி அய்யர் பழுத்த அனுபவம் கொண்ட ஸீனியர் வித்வான். இக்காலத்திய தன்னங்களில்லாத சம்பிரதாய முறை கொண்டவர். மோஹனம், காம்போதி ராகங்கள் ஒழுங்காயிருந்தன. கபி ஜோராயிருந்தது.

11ல் சென்னையில் ஏ. மீனாக்ஷி வாசித்த வயலின் வாத்யம் ஜோராயிருந்தது. அடாணா, பந்துவராளி, கமாஸ, மனோஹரி ராகங்களும் உருப்படிகளும் ஒழுங்காயிருந்தன.

12ல் திருச்சியில் திருவீழிமிழலை சகோதரர்கள் வாசித்த நாகஸ்வரத்திலிருந்து வின் தாரமாய் வெளிவந்த வராளியும் பல்லவி ராகமாலிகையும் காதை நிரப்பின.

13ல் சென்னையில் வயலின் வாசித்த ஆர். எஸ். கோபாலகிருஷ்ணன் அவ் வாத்யத்தைச் சிறப்பாய்க் கையாளும் இளம் வித்வான்களில் ஒருவர். கௌரி மனோஹரி ராகம் கற்பனை நிறைந்த அழகு வடிவமாயிருந்தது. 'பட்டி விடுவராது' கிருதியின் சங்கதிகள் வெகு தெளிவாயிருந்தன.

தற்காலம் வயலின் வாத்யத்தைச் சிறப்பிக்கும் மேதையாக விளங்கும் துவாரம் வெங்கடசாமி நாயுடுவின் கச்சேரி ஜூலை

# :: ஆகாச கங்கை ::

பகீரதனுடைய பெரும் பிரயத்தனத்தினால் ஆகாச கங்கை பூமிக்கு வந்தபோது அது எத்தகைய அற்புதக் காட்சியாயிருந்திருக்கும்? வானத்திலேயிருந்து மலைச்சிகரத்தின் மீது தடதடவென்று விழுந்து, மலைச் சரிவுகளிலே அருவியாகப் பொழிந்து, பாறைகளிலும் மடுக்களிலும் பாய்ந்து, மேலும் கீழுமாகப் புரண்டு தாவிக்கொண்டும் அலை வீசி மோதிக் கொண்டும் லட்சோப லட்சம் முத்துத் துளிகளை வாரி இறைத்துக் கொண்டும் சமவெளியைச் சேர்ந்து, விசாலமான நதியாகி, நெடுந்தூரம் நெடுந்தூரம் மிக நெடுந்தூரம் கம்பீரப் பிரவாகமாகப் பிரயாணம் செய்து, கடைசியிலே அந்த மாநதி மகா சமுத்திரத்தோடு கலந்து விடும் காட்சி எவ்வளவு மகத்தானது? அதை நாம் கற்பனை செய்து நம் மனதிற்குள்ளே பார்த்து அநுபவிப்பது சாத்தியமா? சாத்தியமானால் அது எவ்வளவு குதூகலம் அளிக்கக்கூடிய விஷயம்?



அத்தகைய மானஸிகக் கற்பனை செய்து கொண்டு குதூகலம் அடைவதற்குச் சாதனம் ஒன்று நமக்குக் கிடைத்திருக்கிறது. இளம் வைணிக வித்வான் ஸ்ரீ கே. சுப்பிரமணியம் கொடுத்திருக்கும் எச். எம். வி. கம்பெனியாரின் நெ. 18934 வீணை ரிகார்டு மூலமாக அத்தகைய குதூகலத்தைச் சங்கீத உலகத்தில் நாம் அநுபவிக்க முடிகிறது.

இந்த இசைத்தட்டில் ஐந்து அழகிய கர்நாடக ராகங்களைப் பொறுக்கி எடுத்து ஸ்ரீ கே. சுப்பிரமணியம் தானம் வாசித்திருக்கிறார். ஆரபி ராகத்தில் இசை வெள்ளமானது மலைச் சரிவுகளில் அமோகமாக விழும் அருவியைப் போல் பொழிகிறது. அடுத்த அடாணா ராகத்தில் பாறைகளுக்கிடையே மேடுகளிலும் பள்ளங்களிலும் முத்துத் துளிகளை வாரி இறைத்துக்கொண்டு பாய்கிறது. அடுத்த பந்துவராளியில் சங்கீதப் பிரவாகம் விசாலமான கம்பீர நதியாக மாறுகிறது. அடுத்த கானடாவில் எழில் மிகுந்த சோலைகளிலே அந்த இசை நதி புகுந்து செல்லும்போது இருபுறத்திலும் உள்ள விருக்ஷங்களிலிருந்து வர்ண மலர்கள் கலகலவென்று உதிர்ந்து பிரவாகத்தில் மிதந்து அழகுக்கு அழகு செய்கின்றன. கடைசியாக, கேதாரகௌளத்தில் சங்கீத மகா சமுத்திரத்திலேயே இசைவெள்ளம் கலந்து நம்மை ஆனந்த வெள்ளத்தில் முழுகச் செய்து விடுகின்றது. சிறிது நேரம் திக்குமுக்காடிப் போகிறோம் என்று சொல்வதும் மிகையாகாது.

நமது கர்நாடக சங்கீதக் கருவிகளுக்குள்ளே வீணை மிகப் புராதனமானது; நம்முடைய சங்கீத இயல்புக்கு மிகவும் பொருந்தமானது. இன்னிசை வீணையுடனும் யாழுடனும் சேர்ந்தே நமது தென்னிந்திய சங்கீதம் ஆயிரக் கணக்கான வருஷங்களாக வளர்ந்து வந்திருக்கிறது என்று சொல்லலாம்.

மனிதக் குரலிலேயுள்ள மாதுர்யத்தை யெல்லாம்,—வசீகரத்தை யெல்லாம்,—வீணையிலே கொண்டுவரலாம். மனிதக் குரலிலே சாதிக்க முடியாத காரியங்களை யெல்லாம் வீணையிலே சாதிக்கலாம்.

சென்ற சிலகாலமாய் நமது சங்கீதத்துக்குப் புத்துயிர் ஏற்பட்டிருப்பதற்கு அறிகுறியாக வீணை வாத்தியமும் மறுமலர்ச்சி யடைந்து வருவதைக் காண்கிறோம். அந்த வாத்தியத்தின் வனப்புகள் பெருமைகள் எல்லாம் விளங்கும்படியாக இந்த இசைத்தட்டில் வீணையின் தேனிசை பொழியப் பட்டிருக்கிறது. ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் இசை வெள்ளம் ஒரே மதுர தாரையைப் போல் இடைவிடாமல் பாய்ந்து கொண்டே இருக்கிறது. "இசை வெள்ளம்" என்று சொல்வதின் உண்மையான பொருளை இந்த இசைத் தட்டைக் கேட்டு நன்றாய்த் தெரிந்து கொள்ளலாம்.

இவ்வளவு புகழ்ச்சி செய்கிறோமே, இதெல்லாம் தகுமா என்பதைத் தயவுசெய்து மேற்படி இசைத் தட்டைக் கேட்டுவிட்டு நீங்களே நிர்ணயியுங்கள்.

அண்ணாமலைச் சங்கீத கலாசாலையில் சில காலம் ஆசிரியரா யிருந்தவரும், "இசைக் கலை மர்மம்" என்னும் நூலின் பிரசித்த ஆசிரியருமான பிடில் சீனிவாசய்யரின் சிஷ்யர், இந்த இளம் வைணிகர் கே. சுப்பிரமணியம் என்று அறிகிறோம். சிஷ்யருடைய வாசிப்பிலிருந்து குருவின் பெருமையையும் அறிந்து கொள்ளக் கூடும். —"கர்நாடகம்"



## அவள்மேல் குற்றம் இல்லை!

தற்போது பிலிப்பைன் தீவுகளின் முதல் குடியரசுத் தலைவராக வந்திருக்கும் மானுவேல் ரோக்ஸாஸ் ஒரு பெரிய வக்கீல். ஒரு முறை அவர் கோர்ட்டில் ஒரு கட்சிக்காரரின் சார்பில் பேசிக் கொண்டிருந்தபோது, பிரதிவாதியாக வந்திருந்த ஒரு பெண்ணைப் பார்த்து, "நீ ஏன் அந்தக் கொள்ளைக்காரனைக் கல்யாணம் செய்து கொண்டாய்?" என்று கேட்டார்.

அந்தப் பெண் கைகளைப் பிசைந்து கொண்டு, "நான் என்ன செய்வது? வெகு நாள் வரை காத்திருந்தேன். என்னைக் கல்யாணம் செய்து கொள்வதற்குத் தகுந்தவர்கள் யாருமே முன்வரவில்லை. கடைசியில், ஒரு வக்கீலும் ஒரு கொள்ளைக்காரனும் வந்தார்கள். நான் கொள்ளைக்காரனையே கல்யாணம் செய்துகொண்டேன்" என்றாள். ரோக்ஸாஸின் முகம் வெட்கத்தால் சிவந்தது!



# யசோதரா

ஆசிரியர்: விச்வம்பரநாத் கௌசிக்
மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## 5

மத்தியானம் சிறிது அமைதி நிலவியதும், ராமநாதபாபு, பிச்சைக்காரனும் அவனுடைய மகளும் தங்கியிருந்த அறைக்குச் சென்று மெதுவாக உட்புறம் எட்டிப் பார்த்தார். பிச்சைக்காரன் படுத்திருந்தான். அவன் தலைமாட்டில் அவனுடைய மகள் உட்கார்ந்து ஏதோ பேசிக்கொண்டே விசிறியால் மெதுவாக வீசிக் கொண்டிருந்தாள்.

ராமநாத பாபு வாசற்படியில் நின்றபடியே அவர்களிருவருடைய பேச்சையும் கேட்டுக் கொண்டிருந்தார். உடம்பு குணமானதும் ராமநாதபாபுவின் வீட்டிலேயே ஒரு வேலை கேட்கும்படி அந்தப் பெண் தன் தந்தையை வற்புறுத்திக் கொண்டிருந்தாள். பெண்ணின் சொற்களைக் கேட்டதும், ராமநாத பாபு முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது.

இப்படி வெகு நேரமாக நின்று கொண்டிருந்த ராமநாத பாபுவுக்குக் கால்கள் கடுத்துவிட்டன. ஒரு கனைப்புக் கனைத்தார். "யார் அது ?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"நான் தான் ; உன் தகப்பனுக்கு உடம்பு எப்படி இருக்கிறது ?" என்று கேட்டுக் கொண்டே அறைக்குள்ளே நுழைந்தார் ராமநாதபாபு.

பிச்சைக்காரன் அவரைக் கண்டதும், இரு கைகளையும் குவித்துக்கொண்டு "இந்த ஏழையை நீங்கள் தான் காப்பாற்றினீர்கள். இல்லையானால் அங்கேயே கிடந்து செத்திருப்பேன். கடவுள் உங்களுக்குச் சுகத்தைக் கொடுக்க வேணும்" என்றான்.

"உனக்கு உடம்பு இப்பொழுது எப்படியிருக்கிறது ? ஜுரம் இறங்கி இருக்கிறதா?"

"பூராவாக இறங்கவில்லை. ஆனால் கொஞ்சம் குறைந்திருக்கிறது, உங்கள் புண்ணியத்திலே !"

"இன்னும் இரண்டு மூன்று நாட்களில் குணமாகி விடுவாய்" என்றார் ராமநாதபாபு.

"உங்கள் சோறு சாப்பிடக் கொடுத்து வைத்திருந்தால் கட்டாயம் பிழைத்து விடுவேன்."

அப்போது அந்தப் பெண் ராமநாத பாபுவை நோக்கி, "ஐயா! என் அப்பாவை உங்கள் வீட்டிலேயே வேலைக்கு வைத்துக் கொள்ளுங்களேன்!" என்றாள்.

"உன் அப்பா என் வீட்டிலே வேலை செய்வாரா ?" என்றார் ராமநாதபாபு.

"ஏன் மாட்டார்? உங்களைப் போல எசமானர் எங்கள் அப்பாவுக்குக் கிடைக்க வேண்டுமே!" என்று கூறும்பொழுதே அவள் நாணத்தினால் கண்களைக் கீழே கவிழ்த்துக் கொண்டாள்.

"எசமான், என்னை உங்கள் வீட்டிலேயே வேலைக்கு வைத்துக் கொண்டால் நல்லது தான். இந்தக் கிழ வயதிலே நான் எங்கேயெல்லாம்தான் அலைவேன்! இந்தப் பெண் கவலை வேறு பெரிய கவலையாக இருக்கிறது. வயது வந்த பெண்ணை அழைத்துக் கொண்டு எங்கெல்லாம் சுற்றுவது ?" என்றான் பிச்சைக்காரன்.

"உனக்குப் பிடித்தமானால், நீ இங்கேயே சந்தோஷமாக இருக்கலாம்" என்றார் ராமநாதபாபு.

பிச்சைக்காரன், ராமநாதபாபுவை மனமார வாழ்த்தினான். பெண், தலை குனிந்தவாறு உட்கார்ந்திருந்தவள், ஒரு கணம் கண்களை நிமிர்த்தி ராமநாதபாபுவைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் அன்பும் நன்றியும் பொங்கித் ததும்பின. அதைக் கண்ட ராமநாதபாபு, மனதிற்குள்ளேயே, "ஆகா, என்ன பார்வை!" என்று சொல்லிக் கொண்டே தனது அறையை அடைந்தார்.

இப்பொழுது பிச்சைக்காரன் பூரண குணமடைந்து வேலையும் செய்ய ஆரம்பித்து விட்டான். புதிய வேலைக்காரனைப் பார்த்து, ராமநாதபாபுவின் தந்தை "இந்தப் புதிய ஆள் யார் ?" என்று கேட்டார்.




"ஒரு ஏழைப் பிராம்மணன்; பசியினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். அதனால் வேலைக்கு வைத்துக்கொண்டு விட்டேன்."

"வேண்டிய ஆட்கள்தான் இருக்கிறார்களே! இவனை எதற்காக வைத்துக் கொண்டாய்?"

"பாவம், ஏழையாயிருக்கிறானே என்று வைத்துக் கொண்டு விட்டேன்."

ராமநாதபாபுவின் தந்தை சியாமநாத்பாபு மிகவும் நல்லவர். ஒரே பிள்ளையான ராமநாதபாபுவிடம் அத்தியந்த அன்பு கொண்டவர். ஆகையால் அவர் அதற்குமேல் ஒன்றும் கேட்கவில்லை.

பிச்சைக்காரனுடைய மகளுக்கும் ராமநாதபாபுவின் வீட்டில் வேலை கிடைத்து விட்டது. அவள் ராமநாதபாபுவின் தாயாருக்கும் தங்கைக்கும் ஊழியம் செய்து வரலானாள்.

ஒரு நாள் மாலை ராமநாதபாபு உலாவுவதற்காகப் போயிருந்தார். திரும்பி வந்து பார்க்கும்பொழுது அவருடைய அறை மிகவும் சுத்தமாகக் காணப்பட்டது. அறை எப்பொழுதுமே அப்படி இருந்தது கிடையாது. புத்தகங்கள் எங்காவது கிடக்கும். பேப்பர்கள் இங்கு மங்கும் கிடக்கும். மேஜையின்மீது ஒன்றுமே வைக்க இயலாதபடி காகிதக் குவியல்கள் குவிந்திருக்கும். சில சமயம் வேலைக்கார ஹரத்வாரி அவைகளை ஒழுங்காக அடுக்கி வைப்பான். ஆனால் அவர் ஒருநாளும் அவனிடம் 'சாமான்களை



ஒழுங்காக வை' என்று சொன்னதே கிடையாது. ஆகையினால் 'சம்பாவுக்கு இப்படிக் கிடப்பதுதான் பிடிக்கிறது போலிருக்கிறது. ஒழுங்காக அடுக்கி வைப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை' என்ற எண்ணம் அவன் மனத்தில் வேரூன்றி யிருந்தது போலும். அதனால் அவன் இவ்விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்தவேயில்லை.

இன்று தன்னுடைய அறை சுத்தமாக இருப்பதையும் புத்தகங்கள் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருப்பதையும் பார்த்து ஆச்சரிய மடைந்தார் ராமநாதபாபு. சில சமயம் அவரது தங்கை புஸ்தகங்களை அடுக்கி வைத்துவிட்டுப் போவது உண்டு. அவள் தானே என்று நினைத்துக் கொண்டு தன் தங்கையைக் கூப்பிட்டு, "என் சம்பா! இன்று நீ என் அறைக்கு வந்திருந்தாயா?" என்று கேட்டார்.

சம்பாவதி புன்முறுவலுடன் "உனக்கு எப்படித் தெரிந்தது அண்ணா?" என்று கேட்டாள்.

"அறையைப் பார்த்ததும்தான்."

"வந்திருந்தது வாஸ்தவம்தான். ஆனால், அது நான் செய்த வேலை யில்லை."

"ஏன் பொய் சொல்லுகிறாய்? நீ செய்யவில்லை என்றால் வேறு யார் செய்வார்கள்? யாருக்கு இவ்வளவு அக்கறை இருக்கப் போகிறது?"

"உண்மையாகச் சொல்கிறேன், அண்ணா! நான் ஒன்றுமே செய்யவில்லை!"

"இன்னும் அதே பொய்?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. என்னோடு 'ஜஸ்லோ' வந்தாள். அவள்தான் செய்தாள்."

பிச்சைக்காரப் பெண்ணின் பெயர்தான் 'ஜஸ்லோ'! அவளுடைய உண்மையான பெயர் யசோதா. ஆனால் எல்லாரும் கூப்பிடுவது 'ஜஸ்லோ' என்றுதான். ஜஸ்லோ என்ற பெயரைக் கேட்டதுமே ராமநாதபாபு பேசவில்லை. ஆனால் சிறிது யோசித்தவாறு, "அவளுக்கு எந்த எந்த சாமானை எங்கெங்கே வைக்க வேண்டுமென்பது தெரியுமாக்கும்!" என்றார்.

"நான்தான் பக்கத்திலிருந்து சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தேனே!"

இந்தப் பதிலைக் கேட்டதும், பேசாமல் தனது அறைக்கு வந்தார் ராமநாதபாபு. தனது அறையை ஒருமுறைச் சுற்றிப் பார்த்துவிட்டு, 'ஜஸ்லோ தனது சொந்த ஊகத்தைக் கொண்டும் வேலை செய்திருக்கிறாள். சம்பாவின் சொற்படி மட்டும் செய்யவில்லை' என்ற முடிவுக்கு வந்தார். ஏனெனில் சம்பா தன் கையாலேயே எத்தனையோ தடவை இந்தக் காரியத்தைச் செய்திருக்கிறாள். இவ்வளவு சுத்தமாக ஒருநாளும் செய்ததில்லை.

இப்பொழுதெல்லாம் ராமநாதபாபுவின் அறை பெரும்பாலும் ஒழுங்காகவும் சுத்தமாகவும் இருந்தது. யசோதாவுக்கு ராமநாதபாபுவின் காரியங்களைச் செய்வதில் ஒரு தனியான ஆனந்தம். அவளுக்கு ஓய்வு கிடைக்கும் பொழுதெல்லாம் அவருடைய அறையைச் சுத்தம் செய்து புஸ்தகங்களை ஒழுங்காக அடுக்கி வைத்து வந்தாள்.

ஒருநாள் வழக்கம்போல் யசோதா அவருடைய அறைக்குச் சென்று சாமான்

கலை ஒழுங்கு படுத்திக் கொண்டிருக்கும் பொழுது, ராமநாதபாபு தற்செயலாக அறைக்குள்ளே நுழைந்தார். அவரைக் கண்ட யசோதரா திடுக்கிட்டு தடுதடுக்கித் தலை குனிந்து நின்றாள். ராமநாதபாபு ஒன்றுமே தெரியாதவர் போல, "அடே! ஜஸ்ஸோவா? நீயா இங்கிருக்கிறாய்?" என்று சொல்லிக் கொண்டே அறையின் நாற்புறமும் சுற்றிப் பார்த்துவிட்டு, முக மலர்ச்சியோடு "இப்பொழுதெல்லாம் எனது அறை ரொம்பச் சுத்தமாக இருக்கிறது. இது மாதிரி என் அறை இருந்ததே கிடையாது. உன் கை பட்டு இது பளிங்குபோலாகி இருக்கிறது" என்று கூறினார்.

யசோதரா ஒன்றும் பதில் சொல்லாமல் மௌனமாக நின்று கொண்டிருந்தாள்.

ராமநாதபாபு மேஜையின் அருகிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, "சம்பா உன் தலையிலே இந்த வேலையைக் கட்டி விட்டாளோ! அவள் ரொம்ப சோம்பேறி! எப்பொழுதுமே ஒன்றும் செய்ய மாட்டாள். நீ வந்த பிறகு இன்னும் மோசமாகப் போயிருப்பாள். இல்லையா?" என்று கேட்டார்.

யசோதரா மெதுவான குரலில் "இல்லை, இல்லை. அவள் ஒரு பொழுதும் என்னிடம் சொன்னது கிடையாது. நானாகத்தான் செய்கிறேன்" என்றாள்.

"நீயாகவா? தேவலையே!"

உள்ளிருந்து அதே சமயம் "ஜஸ்ஸோ!" என்ற குரல் வந்தது. யசோதரா வேகமாக அங்கிருந்து போய் விட்டாள்.

## 6

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு, யசோதரா தன்னைக் காதலிக்கிறாள் என்பதை ராமநாதபாபு நன்கு தெரிந்து கொண்டார். ஆனால் 'ஜஸ்ஸோவோ ஒரு பிச்சைக்காரப் பெண்; நாமோ பணம் படைத்த உயர் குலத்துப் பிள்ளை. நமக்கும் அவளுக்கும் ஏற்படும் காதல் வெற்றி பெறாது' என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். ஆகையினால் தன்னால் கூடுமான வரையில் அவளை மறக்க முயன்றார். ஆனால் ஏனோ அந்த விஷயத்தில், அவருக்கு வெற்றி கிட்டவே இல்லை.

யசோதரா தன்னைக் காதலிக்கிறாள்; தான் சொல்வதை மிகக் கவனமாகக் கேட்கிறாள் என்ற நம்பிக்கை உதித்து விடவே, அவர் தன் மனதிலுள்ள உணர்ச்சிகளை அவளுக்குச் சொல்லிவிட வேண்டும் என விரும்பினார்.

யசோதராவைத் தனியாகப் பார்க்கும் பொழுதெல்லாம் சொல்ல வேண்டும் என்ற ஆவா ஏற்படும். ஆனால் வாய் திறக்கத் துணிவு ஏற்படாது. கைக் கெட்டிய சந்தர்ப்பம் இம்மாதிரி நழுவி விடும்பொழுதெல்லாம், தன் பலவீனத்தின் மீது அவருக்குக் கோபம் கோபமாக வரும்.

ஒரு நாள் அவர் 'என்ன ஆனாலும் சரி, இன்று சமயம் வாய்க்கும் பொழுது என் அன்பை அவளிடம் சொல்லியே தீருவேன்' என்று திட சங்கல்பம் செய்து கொண்டார். ஒரே வீட்டில் இருந்ததனால் சந்தர்ப்பம் வாய்க்க அதிக நேரம் பிடிக்கவில்லை.

யசோதரா அவருடைய அறையை சுத்தம் செய்து கொண்டிருக்கும் சமயம் பார்த்து அவர் தம் அறைக்குள் சென்றார். யசோதரா பேசாமல் நாணிக் கோணிக் கொண்டு ஒரு மூலையில் நின்று கொண்டாள்.

அவர் ஒரு நாற்காலியின் மீது அமர்ந்து, நான்கைந்து நிமிஷம் 'என்ன சொல்வது, எப்படி ஆரம்பிப்பது?' என்று சிந்திக்கலானார். கடைசியில் அவருக்குத் தனது 'பீஷ்ம-பிரதிக்ஞை'யின் நினைவு வரவே, "ஜஸ்ஸோ, இதோ பார், எப்பொழுது பார்த்தாலும் நீ என் வேலையையே செய்து கொண்டிருக்கிறாயே, இதற்கென்ன அர்த்தம்?" என்று பேச்சை ஆரம்பித்தார்.

யசோதரா மௌனமாக நின்று கொண்டிருந்தாளே ஒழிய, வாய் திறக்கவே இல்லை.

"ஏன் ஜஸ்ஸோ, பதிலே சொல்லாமல் நிற்கிறாய்?"

யசோதரா மெதுவான குரலில் "நான் உங்கள் வேலைக்காரி தானே!"

"நீ ஒன்றும் என் வேலைக்காரி இல்லை. அம்மாவுக்கும் தங்கைக்கும் வேலைக்காரி என்று வேண்டுமானால் சொல்லிக் கொள்."

"எனக்கு நீங்கள் தான் எசமானர் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே யசோதரா ராமநாதபாபுவைப் பார்த்தாள். யசோதராவின் மனதில் உள்ளதைத் தெரிவிக்க, அந்தப் பார்வையில் இருந்த சக்தி வார்த்தைகளில் ஏது?

யசோதராவின் இந்த அன்பு ததும்பிய முகமும் அவளது கபடமற்ற அழகிய ரூபமும் காதல் வீசும் பார்வையும் ராமநாத

பாபுவை மெதுவாக யசோதராவிடம் நெருங்கச் செய்தது. "என் ஜஸ்லோ, உண்மையில் நீ என்னைத்தான் உனது எஜமானராக எண்ணுகிறாயா?" என்று அவளை அன்புடன் பார்த்தவாறே கேட்டார்.

யசோதரா நாணத்தினால் தலை குனிந்து கொண்டாள். அவள் ஒன்றும் பதிலே சொல்லவில்லை. அவர் மெதுவாக அவளுடைய கையைப் பிடித்துத் தன் கையுடன் சேர்த்துக் கொண்டு "என் கேள்விக்குப் பதில் சொல்லக் கூடாதா?" என்றார்.

"இதற்கு நான் என்ன பதில் சொல்வது?" என்று சொல்லும்போது அவளுடைய உடல் நடுங்கிற்று. அவளது உள்ளத்தில் ஆனந்தம் கரை புரண்டோடியது. இந்த மாதிரிச் சுகமோ ஆனந்தமோ அவள் இதற்கு முன் அனுபவித்ததே கிடையாது. அவள் பதற்றத்துடன் "நான் போய் வருகிறேன். என்னை விட்டு விடுங்கள்"—என்று சொல்லிக் கொண்டே அவரிடமிருந்து தன்னுடைய கையை விடுவித்துக் கொள்ள முயன்றாள்.

"என் கேள்விக்குப் பதில் சொல்லாமல் நீ போகக் கூடாது."

"நீங்கள் எனக்குச் செய்த நன்மையைப் போல வேறு யாராவது செய்வார்களா? அதனால் தான் நீங்கள் எனக்கு எசமானர். நான் உங்கள் அடிமை" என்றாள்.

"நான் உனக்கு நன்மை செய்திருக்கிறேன் என்பதற்காகவா நீ எனக்கு ஊழியம் செய்கிறாய்?" என்று சொல்லிக் கொண்டே யசோதராவின் கையை விட்டுவிட்டு "ஜஸ்லோ, நான் ஏமாந்தேன். நான் வேறு விதமாக எண்ணிக் கொண்டிருந்தேன்" என்று சொல்லிவிட்டு யசோதராவைப் பரிதாபமாகப் பார்த்தார்.

யசோதரா துணிவை வரவழைத்துக் கொண்டு—"என்ன எண்ணிக் கொண்டிருந்தீர்கள்?" என்று கேட்டாள். அவளது கேள்வியில் காணப்பட்ட தயக்கத்தை ராமநாதபாபு சரியாகக் கவனிக்கவில்லை.

"என்ன எண்ணிக் கொண்டிருந்தேன் என்பதை நான் எப்படிச் சொல்வது?"

யசோதரா சிறிது நேரம் பேசாமலிருந்த பின்னர், "எல்லாம் தெரிந்தும் தெரியாதவர்கள் போலிருப்பவர்களுக்கு எப்படித்தான் சொல்ல முடியும்?" என்று கூறி விட்டு வெகு வேகமாக அந்த அறையிலிருந்து வெளியே போய் விட்டாள். (தொடரும்)

# படித்துப் பார்!

## புன்னகை

[ஆசிரியர்: சுந்தா: பிரசுரம்: ஜோதி நிலையம், திருவல்லிக்கேணி, சென்னை; விலை: ரூ. 2—8—0.]

"கல்யாணத்தைப் பண்ணிப் பார்; வீட்டைக் கட்டிப் பார்" என்பது பழமொழி. கல்யாணம் பண்ணுவதும் வீடு கட்டுவதும் அத்தனை கஷ்டமான காரியமாம். ஆனால் ஒரு கட்டுரை எழுதுவதிலுள்ள கஷ்டம் மேற் கண்ட இரண்டு காரியங்களிலும் கிடையாது என்பதுதான் நமது அபிப்பிராயம்.

ஒரு கட்டுரை எழுதுவதிலுள்ள கஷ்டங்களை உணர வேண்டுமானால் ஆசிரியர் சுந்தா கூறுவதைப் போல் 'ஒரு கட்டுரையை எழுதிப் பார்' என்றுதான் கூறவேண்டும்.

அதிலும் தெரு விளக்கு, மூக்குக் கண்ணாடி, தவளைகள், விரல்கள், ஜன்னல்கள், விளம்பரங்கள் முதலிய அதி சாதாரண தலைப்புகளை வைத்துக்கொண்டு வரிக்கு வரி புன்னகை பூக்கும் வண்ணம் எழுதுவதென்றால் லேசுப்பட்ட காரியமா?

கட்டுரை எழுதுவதற்கு நல்ல பேனா மட்டும் இருந்தால் போதாது. மேஜை, நாற்காலி, வழவழப்பான காகிதம் இருந்தாலும் பிரயோஜனமில்லை. உச்சி மோட்டை அண்ணாந்து பார்த்தாலும் பலனில்லை.

புகையிலை வாசனையைக் கொண்டும் கட்டுரை புனைந்துவிட முடியாது. தெருப் புழுதியைப் பற்றி எழுதுவதாயிருந்தாலும் அதைக் குறித்துச் சுவை குன்றாமல் எழுதுவதற்குத் தனிப்பட்ட திறமை வேண்டும்.

தமிழ் நாட்டு எழுத்தாளர்களுக்குள்ளே சுந்தா தமக்கென்று தனியான ஒரு பாணியை அமைத்துக் கொண்டிருக்கிறார்.

அவருடைய கட்டுரைகளைப் படிக்க ஆரம்பித்து விட்டால் விஷயமும், வர்ணனையும், ஹாஸ்யமும், புன்னகையும் மாறி மாறி உருவெடுத்துக் கொண்டே இருக்கின்றன.

கட்டுரையைப் படித்து முடித்ததும் 'ஒன்றைகினால்' காப்பி சாப்பிட்ட மாதிரி உற்சாக உணர்ச்சி தோன்றுகிறது.

சுந்தாவின் முப்பது கட்டுரைகளைத் தொகுத்துப் புன்னகை என்ற பெயருடன் வெளியிட்டிருக்கும் ஜோதி நிலையத்தார் புத்தகத்தின் அட்டையைப் பளபள வென்று ஜொலிக்கச் செய்திருக்கிறார்கள். புத்தகமும் மளமள வென்று விற்றுப் போகும் என்பதில் ஐயமில்லை.

## இளவேனில்

[ஆசிரியர்: சோமு: பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், பாலக்கரை, திருச்சி; விலை: ரூ. 2.]

பாட்டு என்றால் பத்துக் காத தூரம் ஓடுபவர்கள் எல்லாம் இந்த இளவேனிலைப் பார்த்தால் மூப்பதடி முன்னால் வருவார்கள்.

குற்றாலத்தைப் பற்றிச் சோமு பாடியிருக்கும் பாடலைப் பற்றித் 'தமிழ் மகளுக்கு ஒரு சீதனம்' என்கிறார் ரஸிகர் டி. கே. சி.

அந்தச் சீதனத்திலே கொஞ்சம் மாதிரிக்கு இதோ பாருங்கள் :—

வானை அளந்துநிற்கு மலைகளன் றோ—நல்ல
வாரமொழி தேன்தக்கை அருவையன் றோ
தேனைச் சொரிந்திடுஞ் சோலைகளன் றோ—வானத்
தேவியர் நீர்விளை யோடைகளன் றோ

இப்படிப்பட்ட சீதனம் பொக்கிஷமான இந்தப் புத்தகத்துக்கு ரஸிகமணி எஸ். வையாபுரிப் பிள்ளை தந்திருக்கும் முன்னுரையில், "இப் பாடல்களில் எளிய சொற்களே உள்ளன. ஆனால் எத்தனையோ ஆற்றல் வாய்ந்தன" என்று கூறி யிருக்கிறார். உதாரணத்துக்கு இதைக் கேளுங்கள்:—

"எத்தனை கனவுகள்! எத்தனை காதல்கள்!
எத்தனை எத்தனையோ! — நிதம்
எத்தனை இன்பம்! எத்தனை துன்பம்!
எத்தனை எத்தனையோ! — நித்தம்
எத்தனை எத்தனையோ!"

இந்த வரிகளில் உள்ள "எத்தனையோ!" சப்தம் ஸ்ரீ வையாபுரிப் பிள்ளையின் உள்ளத்தை எத்தனையோ கவர்ந்து அவருடைய வசனத்திலும் புகுந்து கொண்டிருப்பதிலிருந்து, சோமுவின் கவிதை எத்தனையோ ஆற்றல் வாய்ந்தது என்பது உறுதியாகிறது.

"இளவேனில்" என்னும் இந்தக் கவிதை நூலைக் குறித்து இன்னும் எத்தனை எத்தனையோ சொல்லலாம். ஆனால் அவசியமில்லை. ஏனெனில், இந்தக் கவிதை நூலை ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களுக்குச் சோமு சமர்ப்பணம் செய்திருக்கிறார் என்பது ஒன்றே போதும். இந்த ஒன்றைச் சொல்வது எத்தனையோ சொல்வதற்கு இணையாகும்.

ஒவ்வொரு பக்கத்திலும் அழகிய தலைப்புப் படமும் போட்டு உயர்ந்த 'ஆர்ட்' காகிதத்தில் வெளியாகி யிருக்கும் சோமுவின் பாடல் தொகுதிக்கு விலை ரூபாய் இரண்டு அதிகமில்லை என்று நிச்சயம் சொல்லலாம்.

# அவர்களின் தேவை



ஓடியாடி விளையாடும் சிறுவர்களுக்குத் தேவையானது காமதேனு வனஸ்பதியில் தயாரிக்கப்பட்ட உணவுதான். அது அவர்களுக்கு பலத்தையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது.

**காமதேனு வனஸ்பதியையே நீங்களும் உபயோகியுங்கள்.**

அது பரிசுத்தமானது. கையால் தொடாதது. ஸீலிட்ட டின்களில்தான் விற்கப்படுகிறது. மிக நேர்த்தியான நெய்யின் தரத்திற்கு சமமாகத் தயாரிக்கப்பட்டது. குறைந்த செலவில் நிறைந்த புஷ்டி. மணமும் இல்லாததால் பதார்த்தங்களின் வாசனையைப் பாதிக்காது.

தயாரிப்பவர்:

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட், மேட்டூர் அணை

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: வி. சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட், திருச்சி

பூரண விற்பனையாளர்கள்:

தி அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்டிரிப்யூடர்ஸ் லிமிடெட்,
120, அரமனைக்காரத் தெரு, ஜி. டி. மதராஸ்

**KAMADHENU**
*Vanaspati*



FAS-221



# மூன்று பூனைக்குட்டிகள்

ராஜி

ஒரு பூனைக்கு மூன்று குட்டிகள் பிறந்தன. அந்த மூன்று குட்டிகளும் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருந்தன. ஒரு குட்டி வெள்ளையாக இருந்தது. மற்றொரு குட்டி கருப்பாக இருந்தது. மூன்றாவது பூனைக் குட்டியின் நிறம் கருப்பும் வெள்ளையுமாகக் கலந்திருந்தது. மூன்று குட்டிகளும் பிறந்தது முதல் தாய்ப் பூனையைச் சுற்றி சுற்றி வந்து கொண்டிருந்தன.

இவ்வாறு பத்துப் பதினைந்து நாள் கழிந்தது. பூனைக் குட்டிகள் மெதுவாகத் தள்ளாடித் தள்ளாடி நடக்க ஆரம்பித்தன. அவைகளுக்குப் போதிய பலம் வந்தவுடன், வெளியில் போய் உலாவ வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. ஒரு நாள் குட்டிகளுக்கு ஆகாரம் கொண்டு வருவதற்காக தாய்ப் பூனை வெளியில் போயிருந்தது. வெகு நேரமாகியும் திரும்பி வரவில்லை. குட்டிகளுக்குப் பசி அதிகமாயிற்று. "அம்மா வருவதற்குள் நாமே வெளியில் போய் ஏன் ஆகாரம் சம்பாதித்துக் கொண்டு வரக்கூடாது?" என்று யோசித்தன. உடனே அந்த மூன்று குட்டிகளும் மெதுவாகத் தள்ளாடி நடந்து கொண்டே வெளியில் சென்றன.

அப்போது பக்கத்திலேயிருந்த வீட்டில் ஒரு பெரிய விருந்து நடந்து கொண்டிருந்தது. அங்கு ஏராளமான மேஜைகளும் நாற்காலிகளும் போடப் பட்டிருந்தன. எல்லோரும் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். இதுதான் சரியான சமயம் என்று அந்த மூன்று பூனைக் குட்டிகளும் மூலையில் போடப்பட்டிருந்த ஒரு மேஜைக்கு அடியில் ஒளிந்து கொண்டன.

அப்போது, பூனைக் குட்டிகளின் அதிர்ஷ்ட வசமாக, விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்களின் கையிலிருந்த ஒரு தின்பண்டம் தவறிக் கீழே விழுந்தது. உடனே அந்த மூன்று குட்டிகளும் அதன் அருகே ஒரே பாய்ச்சலாக பாய்ந்தன. அப்போது திடீரென்று அங்கே ஒரு ஜந்து வந்தது.

அது உருவத்தில் மிகவும் சிறியதாக இருந்தது. அதற்கும் பூனைக் குட்டிகளைப் போல நான்கு கால்களும் ஒரு வாலும் இருந்தன. அதைக் கண்ட குட்டிப் பூனைகளுக்கு உடல் நடுக்கம்

---

## தெரியுமா?



கொக்கு:—என்னப்பா, இது! என் காலில் இவ்வளவு நீளக் கம்பு வைத்துக் கட்டிக் கொண்டு வந்திருக்கிறாய்?

குருவி:—என்ன செய்கிறது? ஊரெல்லாம் தானியப் பஞ்சமாயிருக்கிறது. உன்னைப் போல் மீன் பிடித்தாவது வயிற்றை நிரப்பலாம் என்று வந்திருக்கிறேன்.

எடுத்தது. அந்தச் சிறிய ஜந்து, முகத்திலே கோபம் பொங்க, குட்டிப் பூனைகளைப் பார்த்து, "நீங்கள் மூன்று பேரும் இந்த இடத்தை விட்டு நகருகிறீர்களா, இல்லையா? இந்தத் தின்பண்டத்தை நீங்கள் தொடக்கூடாது. நான் இந்த வீட்டில் வசிப்பதால் இந்தத் தின்பண்டம் என்னைச் சேர்ந்ததாகும். நீங்கள் இந்த இடத்தை விட்டு இப்பொழுதே ஓடுங்கள். அப்படி நீங்கள் ஓடாவிட்டால் நான் உங்களைத் துரத்துவேன்" என்றது.

மூன்று குட்டிகளும் பயந்து கலகலத்துப் போய், எப்படியாவது உயிரோடு தப்பித்தால் போதும் என்று ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து வெளியே ஓடி வந்தன.

அப்போது அந்தக் குட்டிகளைத் தேடி வந்த தாய்ப்பூனை, தன் குழந்தைகளைப் பார்த்து, "எங்கே ஓடுகிறீர்கள்? உங்களை வீட்டில் காணுமல் எங்கெல்லாம் தேடுகிறது?" என்று கேட்டது.

உடனே பூனைக் குட்டிகள் நடுக்கத்துடன் நடந்ததையெல்லாம் கூறின. "அம்மா, அது எங்களைத் துரத்திக்கொண்டு இங்கே ஓடி வந்தாலும் வரும். அது வருவதற்குள் எங்களை வீட்டுக்கு அழைத்துப் போ!" என்று ஒரே சமயத்தில் மூன்று பூனைக் குட்டிகளும் தாய்ப் பூனையிடம் கத்தின.



"அம்மா, அதோ அங்கே ஒரு மந்திரவாதி வேடிக்கை காட்டுகிருன். நான் போய்ப் பார்த்து விட்டு வரலாமா?"

"வேடிக்கை எல்லாம் முடிந்து விட்டது போல இருக்கிறதே! அதோ பார், கூட்டம் கலைந்து ஜனங்கள் எல்லோரும் வருகிருர்கள்."

"நானும் போய் பார்த்து விட்டு வந்து விட்டேன், அம்மா! போகும்போது உன்னிடம் கேட்டுக் கொள்ளவில்லை. அதற்காகவே இப்போது கேட்கிறேன்."

அது தன் குட்டிகளைப் பார்த்து, "அட, பயந்தாங்கொள்ளிக் குழந்தைகளே! இதைப் பார்த்தா நீங்கள் ஓடி வருகிறீர்கள்! எனக்குத் தெரியாமல் நான் சொல்லுவதற்கு முன்னல் வெளியே வந்தால் இந்தக் கதிதான் உங்களுக்குக் கிடைக்கும். அந்தப் பிராணி உங்களைப் பார்த்து பயந்து ஓடுவதற்குப் பதிலாக நீங்கள் ஓடி வந்திருக்கிறீர்களே! அந்த ஜந்துதான் உங்களுக்கு முக்கிய ஆகாரம். அது என்னவென்று தெரியுமா? எலியின் குழந்தையாகிய எலிக் குஞ்சு!" என்றது. எலிக்குஞ்சுக்குப் பயந்துகொண்டு ஓடி வந்த மூன்று பூனைக் குட்டிகளும் வெட்கத்தால் தலை குனிந்தபடி உட்கார்ந்திருந்தன.








"எதைப் பார்த்து நீங்கள் இப்படிப் பயப்படுகிறீர்கள்?" என்று தாய்ப் பூனை கேட்டது.

எல்லாப் பூனைக் குட்டிகளும் ஒரு மூலையைச் சுட்டிக் காட்டின. அதைப் பார்த்தவுடன் தாய்ப் பூனைக்கு அளவு கடந்த சிரிப்பு உண்டாயிற்று.

# காலக்ஷேபம்

## முன் யோசனை!

மாமா:—டேய், சீக்கிரம் சினிமாவுக்குக் கிளம்புடா! 'க்யூ' வரிசையில் முன்னால் நின்றால்தான் எல்லோருக்கும் முன்னால் 'டிக்கெட்' வாங்கிக்கொண்டு போகலாம்!

மருமகன்:—கடைசியில் நின்றால்கூட முன்னால் போகலாம், மாமா!

மாமா:—அது எப்படி?

மருமகன்:—கடைசியில் நின்றால் டிக்கெட் கிடைக்காமல் வீட்டுக்கு முன்னால் போகலாம் அல்லவா! —கே. வி. ஆர்.



## சரியான கேள்வி!

முதல்வர்:—என் செருப்பை எந்த அயோக்யனோ அடித்துக் கொண்டு போய்விட்டான் ஸார்! நேற்று இரண்டு கல்யாணங்களுக்குப் போய் வந்தேன். இரண்டாவது கல்யாணத்தில் தான் அது போயிருக்க வேண்டும்.



மற்றவர்:—ஏன், முதல் வீட்டில் அது போயிருக்கக் கூடாதோ?

முதல்வர்:—இல்லை! முதல் வீட்டில்தானே நான் செருப்பை மாற்றிக் கொண்டது!

—எஸ். எஸ். மூர்த்தி.



## எது உசிதம்?

தாயார்:—பகவானே! நீதான் பாஸ் செய்து வைக்கணும். உன் சந்நிதியில் தங்கக் குத்து விளக்கு வாங்கி வைக்கிறேன். வெள்ளிக் குடம் வாங்கி வைக்கிறேன். எப்படியாவது என் பிள்ளைக்கு பி.ஏ. பாஸ் செய்து வை!

தகப்பனார்:—நிறுத்து! நிறுத்து! 'பெயில்' ஆனாலும் பாதகமில்லை; இன்னொரு வருஷம் படிக்க வைத்தால் நீ வேண்டிக் கொள்கிற செலவு ஆகாது! —ஆர். எஸ். எஸ். மணி.

## புத்திசாலி!

தகப்பனார்:—சோமு, ராமுவுக்கு லெட்டரிலே என்ன எழுதியிருக்கிறாய்?

சோமு (படிக்கிறான்):—"என் பிரியமுள்ள ராமுவுக்கு அநேக நமஸ்காரம். க்ஷேமம்...... தற்போது போஸ்டல் ஸ்டிரைக் நடப்பதால், கஷ்டத்தைப் பொருட்படுத்தாது தயவு செய்து இந்தக் கடிதத்தை நேரே உங்கள் ஊர் போஸ்டாபீசுக்குப் போய் வாங்கிக் கொள்ளவும்." —ராஜாமணி.



## நல்ல இடம்!

வேலைக்காரன்:—எல்லா குமாஸ்தாக்களும் பார்க்கும்படி மானேஜர் 'சர்க்குலரை' ஒட்டச் சொன்னாருங்க; எங்கே ஒட்டுகிறது?

தலைமைக் குமாஸ்தா:—மடையா! கடிகாரத்தின் கீழ் ஒட்டேண்டா! —எச். குருமூர்த்தி.



## எச்சரிக்கை!

வாங்க வந்தவர்:—இந்தக் கண்ணாடியிலே பார்த்தால் எல்லாம் ஒன்றுக்கு இரண்டாகத் தெரிகிறது; இருந்தாலும் வேறு இல்லாதபடியால் இதையே வாங்கிக் கொள்கிறேன்.

கடைக்காரன்:—சரிங்க! ஆனால், பணத்தைக் கொடுத்துட்டுக் கண்ணாடியை மாட்டிக்கிங்க; கண்ணாடியை மாட்டிக்கிட்டு அப்புறம் பணத்தை எண்ணாதீங்க!

—எம். ரி. நீலகண்டம்.



## வருத்தம் ஏன்?

நண்பர்:—கோமல்வர கோபாலய்யர் இறந்து விட்டாராம்.

மற்றவன்:—அதைக் கேட்க எனக்கு ரொம்ப வருத்தமாயிருக்கிறது.

நண்பர்:—ஏன், அவர் உனக்கு உறவோ?

மற்றவன்:—இல்லை; அவர் உறவாயில்லாததால்தான் வருத்தம். —எம். எஸ். துரைசாமி.




காலை வேளையில் ஒரு இந்திய ராஜா தோட்டத்திலேற்படக் கூடிய குதூகல உணர்ச்சியை வினோலியா ஒயிட் ரோஸ் சோப் உங்களுக்குத் தருகிறது. இச் சோப்பின் மிருதுவான செழிப்பாயுண்டாகும் நுரை மிகவும் நேர்த்தியான சருமத்தையும் ஒழுங்காக சுத்தம் செய்கிறது—மேலும் அதன் நறுமணம் உங்களைச் சுற்றிலும் மனோஹர பரிமளத்தைப் பரவச் செய்கிறது. உங்கள் அழகை அதிகப்படுத்த இச் சோப்பைவிட மேன்மையானதோ, தகுதியானதோ வேறு கிடையாது. வினோலியா ஒயிட் ரோஸை உங்கள் இஷ்டத்திற்குரிய சோப்பாகக் கொள்ளுங்கள்.

# வினோலியா ஒயிட் ரோஸ் சோப்

VWR. 19-23 TM

VINOLIA CO., LIMITED, LONDON, ENGLAND

# அருமையான பற்கள்!

## உங்கள் புன்முறுவலை எத்தனை நாட்கள் அவை அழகுபடுத்தக்கூடும்?

ஈறு உபாதிகளை உங்கள் வசீகர புன்னகையை பாழ்படுத்த விடாதீர்கள். தினமும் சுகமளிக்கும் "எஸ். ஆர்." டூத் பேஸ்டினால்* பற்களை சுத்தம் செய்தால் அவைகள் ஆரோக்கியமான ஈறுகளில் உறுதியாகவும், மிக தூய்மையாகவும் விளங்குகின்றன.

*ஈறு வியாதிகளுக்கு பல் வைத்தியர்களால் கையாளப்படும் சிறந்த ஸோடியம் ரிஸினோலியேட் என்னும் மருந்து சேர்ந்தது.




GSR. 24-50 TM D. & W. GIBBS LIMITED, LONDON, ENGLAND

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladen's Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

Regd. No. M. 4392

# சார்லீஸ் டீ




அழகிய
பாக்கெட்டுகளில்
காற்றுப் புகாத
உறைகளில்

# பிஸ்கட்ஸ்

**CHARLEY & CO., USILAMPATTI.**

Agents For Salem & N. Arcot Dts. The General Agencies Corporation First Agraharam, Salem. Agents For Nilgris: Messrs. Brilliant Traders, Ootecamund